


ஸ்ரீ

ஸ்ரீ ஸத்யமூர்த்தயே நம:

# திருமெய்யம் க்ஷேத்திர மகத்துவம்.



ஸ்ரீ பிர்மாண்ட புராணத்தில்

ஸ்ரீ மகேசுவர நாரத ஸம்வாதத்தில் சொல்லப்பட்டது.



பூலோகத்தில் ஜனங்களுக்கு அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைக்கொடுத்துப் பகவானை அடையும்படி செய்யுந்தன்மையுள்ள "நாரதர்" என்ற தேவரிஷியானவர், எல்லோருக்குஞ் சுகத்தைச் செய்யும் மகாதேவனை நோக்கி, ஓ சங்கரனே! ருக், யஜுஸ், ஸாமம் என்ற வேதஸ்வரூபமாயும், குற்றமற்றதாயும், எங்கும் நிறைந்துள்ள விஷ்ணுவைச்சேர்ந்ததுமான "ஸ்ரீரங்கம்" என்னும் க்ஷேத்திரமானது பன்னிரண்டு அக்ஷரங்களோடு கூடிய "துவாதசாக்ஷரம்" என்ற மந்திரத்தால்ஸேவிக்கத்தக்கதென்றுயான்தம்மிடம்கேட்டறிந்தேன். (௧)

பெருஸமபொருந்திய எட்டெழுத்துக்களோடுகூடிய "அஷ்டாக்ஷரம்" என்ற மந்திரமானது மந்திரங்களெல்லாவற்றிலும் சிறந்ததென்று தம்மிடம் யான் கேட்டிருக்கிறபடி அவ்வஷ்டாக்ஷரமந்திரத்தாலேயே பூஜிக்கவேண்டிய க்ஷேத்திரங்களை அருளிச்செய்ய வேண்டும். என்ற நாரதரை நோக்கிச் சங்கரன் சொல்லுகிறார். (௨)

சிறந்த புத்திமானும் எல்லா ஜனங்களுக்கும் பிரியத்தையே செய்யும் தன்மையனும் உள்ள நாரதரே! அந்த அஷ்டாக்ஷரமந்திரத்தால் பூஜிக்கத்தக்க க்ஷேத்திரங்களைச் சொல்லுகிறேன் கேளும். (௩)

அவையாவன—

௧ ௨ ௩ ௪
திருமெய்யம், ஹரித்துவாரம், துவாரகை, நைமிசாரணியம்,
௫ ௬ ௭ ௮
ஸாளக்கிராமம், பதரிகாசிரமம், காஞ்சீபுரம், திருமாலிருஞ்சோலை,
௯ ௧௦
என்ற அழகர்கோவில், திருமலை என்ற திருப்பதி, திருச்சித்திர
௧௧ ௧௨
கூடம் சீர்காழி, சீர்வாமங்கை என்ற வானமாமலை, திருக்குறுங்குடி
௧௩ ௧௪ ௧௫
திருப்பேரை, திருக்குடந்தை என்ற கும்பகோணம், திருமோகூர்,

[கசு] திருவயிந்திபுரம், [கஎ] திருவெள்ளறை, [கஅ] திருவநந்தபுரம் என்ற அநந்த சயனம், [ககூ] திருப்புல்லாணி, [உ௰] சோளசிங்கபுரம், [உக] திருச்சேறை, [உஉ] திருவழுந்தூர், [உ௩] குருக்ஷேத்ரம்=(திருக்குருகூர்=ஆழ்வார்திருநகரி) [உ௪] வாகுணமங்கை, [உ௫] மதுரை= (கூடலழகர் ஸந்நிதி) [உசு] மாதவம், [உஎ] திருக்கோட்டியூர், [உஅ] வண்புருடோத்தமம் என்ற இவ்விருபத்தெட்டு க்ஷேத்திரங்களேயாகும். (எ)

என்று புராணமறிந்தவர் கூறுவர் என்று பரமேசுவான் அருளிச்செய்ய நாரதர் கேட்கிறுர்.

எல்லாமறிந்த சந்திரமௌளீசுவரரே! அஷ்டாக்ஷர மந்திரத்தால் ஆராதிக்கும் விஷயத்தில் அநேக க்ஷேத்திரங்கள் உண்டென்று தம்மால் இப்பொழுது நன்ருய்ச் சொல்லப்பட்டது. அந்தப் புண்ணிய க்ஷேத்திரங்களில் நற்றவஞ் செய்யுமவர்களுக்கு அத்தவத்தின் பலம் நீடித்த காலத்தில் ஸித்திக்குமா? அல்லது சீக்கிரத்தில் ஸித்திக்குமா ? என்ற நாரதரைப் பார்த்து பரமேசுவரன் அருளிச் செய்கிருர். (கூ)

முன்சொன்ன க்ஷேத்திரங்களுள் ஒரு க்ஷேத்திரந் தவிர மற்றவைகளிற் செய்யுந் தவத்திற்குப் பலம் நெடுநாள் சென்று தான் கிடைக்கும். அந்த ஒப்பற்ற ஒரு க்ஷேத்திரமானது தவத்தின் பயனை உடனே கொடுக்கும் உத்தமமான க்ஷேத்திரமென்றறியும். (க௰)

அதின் பெயர் ஸத்திய க்ஷேத்திரம் (திருமெய்யம்) அது இவ்வுலகில் புத்திர பௌத்திர ஸம்பத்துக்களைத் தரும். மோக்ஷத்திற்கு ஸாதனமான பகவானுடைய தியானத்தையும் தரும். வடக்கில் வெள்ளாறும், தெற்கில் மணிமுத்தா நதியும், மேற்கில் பிரான்மலையும், கிழக்கில் “கீழாநிலை” என்ற ஊரும், ஆகிய இந்நான்கெல்லைக்குட்பட்ட ஸ்தலமே “ஸத்திய க்ஷேத்திரம்” என்று நிர்ணயிக்கப்பட்டது. என்ற பரமேசுவரனை நோக்கி நாரதர் கேட்கிருர். (கஉ)

ஸ்வாமி! அந்த க்ஷேத்திரம் அவ்வளவு மகிமை தங்கியதாகத் தாம் சொன்னதினலே, என் மனது திருப்தியடையாமல் தம்மை அது விஷயமாய் இன்னும் கேட்க விரும்புகிறது. ஆகையால் தம்முடைய அமிருத வெள்ளம்போன்ற வசனங்களால் திருப்திசெய்தருள வேண்டுமென்ற நாரதரைக்குறித்து மகாதேவன் கூறுகிருர் (க௩)

முனி சிரேஷ்டரே! அந்த ஸத்திய க்ஷேத்திரத்தின் மகிமையை உமக்கு நான் முழுதும் தெரிவிக்கிறேன். காவேரி நதிக்குத் தெற்கில் மூன்று யோஜனை தூரத்தில் (யோஜனை=காதவழி=10 மைல்)"ஸர்ப்பநதி" என்ற பாம்பாறானது விசேஷமானபுண்ணியத்தைத் தரக்கூடியதாய் "புஷ்ப பத்திரை" என்ற நதியுடன் சேர்ந்து விளங்குகிறது. அவ்வாற்றின் தென்கரையில் "திருமெய்யம்" என்ற க்ஷேத்திரமிருக்கிறது. அத்திருமெய்யத்தில் ஸாளக்கிராம மலைக்கொப்பான மலையொன்றிருக்கிறது. அதில் ஆதிசேஷன் தவம் செய்து வேதரூபியான பகவத் ஸ்வரூபனானான். (கசு)

அத்திரி மகரிஷியின் புத்திரனான சந்திரனும் அதில் தவம் செய்து ஸித்தியடைந்து தனது மண்டலத்தில், கையில் தயிரன்னத்துடன் தனக்குப் பிரத்தியக்ஷமான "ததிவாமனன்" என்ற விக்கிரஹத்தையுடைய விஷ்ணுவைத் தரித்தான். கருடனும் (கஎ) தனது பிதாவான காசியபரின் உத்தரவின்படி தன் தாயின் சிறையை விலக்க இதில் பக்தர்களின் பாவத்தைப் போக்கும் பகவானை நல்ல மனத்துடன் பூஜித்து தன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்து கொண்டான். (கஅ)

ஸத்திய மகரிஷியும் ஹிமாலய பர்வதத்தில் நெடுநாள் தவம் செய்து பிறகு இந்த ஸத்தியகிரியில் தவம்செய்து ஸித்திபெற்றார். ஆகையால் இம்மலை ஹிமாலயத்திலும் சிறந்தது. (கக)

மிகவும் தர்மத்தை நடத்தும் "புரூரவஸ்" என்ற அரசன் மனஸினாலேயே பகவானை ஆராதித்தவன் இம்மலையில் வந்து உத்தம பதவியை அடைந்தான். (உ0)

முற்காலத்தில் விஷ்ணுவுக்குத் துவாரபாலனான "தக்ஷகன்" என்பவன் துர்வாஸ மகரிஷியின் சாபத்தினால் பாம்பினுருவடைந்து இம்மலையில் தவம் செய்து சாபம் விலகப்பெற்று மறுபடியும் விஷ்ணுவை அடைந்தான். (உக)

மகததேசாதிபதியான மிக்க தேஜஸுடைய "இந்திரத்தியும்னன்" என்ற அரசனும் திக்குவிஜயத்திற்காகச் சென்ற ஸமயத்தில் காணமற்போன தனது தேரையும் இஷ்டத்தையும் இங்கடைந்தான். (உஉ)

அப்படிப்பட்ட ஸத்தியகிரியின் கிழக்கில் ஜனங்களுக்குண்டான "ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம்" என்ற மூன்று தாபங்களையும் போக்கக்கூடியதாயும் உலகத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்களுக்கெல்லாம் சிறந்ததுமான "ஸத்திய புஷ்கரிணீ" என்ற தீர்த்தமானது விளங்குகிறது. (உ௩)

உலகத்திலுள்ள மற்ற தீர்த்தங்கள் யாவும் ஸ்நானஞ்செய்த லாலும் சிரஸில் தெளித்துக் கொள்வதாலும் ஜனங்களின் பாவத் தை விலக்கும். இந்த ஸத்திய புஷ்கரிணீ தீர்த்தமோ கையினல் ஸ்பர்சிப்பதினுலும் வாயினல் "ஸத்திய புஷ்கரிணீ" என்று சொல் லுவதாலும் பாவத்தை விலக்கும். (உச)

ஞாயிற்றுக்கிழமை அருணேதயத்தில் எவன் இதில் ஸ்நாநம் செய்கிருனே அவன் செய்நன்றியை மறப்பதான மகாபாவத்தைச் செய்தவனுனலும் அப்பாவம் விலகிப் பரிசுத்தனுவான். ஆதலால் ஸாமான்ய பாவம் விலகுவதில் சந்தேகமில்லை. (உரு)

இந்த ஸத்திய புஷ்கரிணியின் நடுவிலிருந்து எடுக்கப்பட்ட திருமண்ணை எவன் சரீரத்தில் அணிந்துகொள்கிருனே அவனுக்கு சரீரத்தைக் காக்கும் கவசங்கள் ஒன்றும் வேண்டுவதில்லை. (உசு)

இந்தத் தீர்த்தத்தின் கரையில் பிராமணர்களுக்கு அன்ன தானம் செய்தால் ஒரு கவளம் அன்னத்திற்கு ஒரு யாகபலன் ஸித்திக்கும். (உஎ)

என்று கூறிய மகேசனை நோக்கி நாரதர் வினவுகிருர்.

இப்புவனத்தில் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்கள் அநே கங்களிருக்க அவைகளுள் இந்த ஸத்திய புஷ்கரிணீ தீர்த்தத்திற்கு முற்கூறப்பட்ட எல்லாத் தீர்த்தங்களைக் காட்டிலும் அதிக மகிமை எவ்விதம் ஏற்பட்டதென்ற நாரதரை நோக்கி ஈசன் கூறுகிருர்.(உஅ)

இந்தப் பூலோகத்தில் ஆறுகள், தடாகங்கள், கிணறுகள், கடல்கள், மலையருவிகள் ஆகிய ஐந்துவகைப் புண்ணிய தீர்த்தங்களுள்ளன.(உகூ)

முற்காலத்தில் அவைகள் தம்மிடத்தில் எப்பொழுதும் ஸ்நா நம் செய்யும் பர்பஜனங்களின் பாவங்களைச் சுமந்து அப்பாவங்க ளைத் தாங்கள் போக்கிக்கொள்ள சக்தியற்றவைகளாய்ப் போய்,(௩0)
அத்தீர்த்த தேவதைகள் எல்லாம் ஒன்றுகூடிப் பிரமனுலகமாகிய ஸத்தியலோகம் சென்று பிர்மாவை நமஸ்கரித்து கைகூப்பி நின்று பின் வருமாறு விண்ணப்பம் செய்தன. ஓ கமலாஸன! எங்களி(௩க)
டம் ஸ்நாநம் செய்யும் பாபஜனங்களுடைய பாவச் சுமைகளால் நாங்கள் மிக வருத்தமடைகிருேம். அப்பாவங்களைப் போக்கும் வழியை ஏற்படுத்தித் தரவேண்டும். (௩உ)

என்ற தீர்த்தத் தேவதைகளை நோக்கிப் பிரமன் கூறுகிருர். புண்ணிய தீர்த்தங்களே! நீங்கள் வைகாசிமாதம் பூர்ணிமைத் தின த்தில் விசேஷ புண்ணியத்தைத் தரக்கூடிய "ஸத்திய க்ஷேத்திரம்" என்ற திருமெய்யத்தில் ஸத்திய புஷ்கரிணீ தீர்த்தத்தில் ஸ்நாநம்

செய்து உங்களிடமிருக்கும் ஜனங்களுடைய பாவச் சுமைகளை நீக்கிக்கொண்டு பரிசுத்தியை அடையுங்கள். (௩௩)

அத்தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்யும்பொழுது அத்தீர்த்தத்தை ரக்ஷிக்குமவர்களாயும் ஸத்திய க்ஷேத்திராதிபதியான பகவானுடைய ஆஞ்யையை நடத்துமவர்களாயும் 'பத்திரன், ஸுபத்திரன்' என்றபெயர்பூண்டு கையில்கதையும் பாசமும் ஏந்திநிற்கும் இருவர்களை முதலிலே நமஸ்கரித்து, புஷ்பாதிகளால் பூசித்து, அவ்விருவர்களிடமும் அனுமதிபெற்று பிறகு ஸத்திய புஷ்கரிணியில் ஸ்நாநம் செய்யவேண்டும். அந்த ஸமயத்தில் "உலகத்தில் எங்களால் தேடப்பட்ட மகாபாதகம் உபபாதகம் என்ற எல்லாவற்றையும் லோகநாதனுகிய பகவான் நிவிர்த்திசெய்தருளவேண்டும்"(௩௬)

என்ற இம்மந்திரத்தைச் சொல்லியும், பக்தஜனங்களுடைய பாவங்களைப்போக்கும் ஸத்தியகிரி நாதனுகிய பகவானை மனதில் நினைத்தும் ஸத்தியபுஷ்கரிணீ தீர்த்தத்தில் ஸ்நாநம் செல்தால் நீங்கள் உடனே பரிசுத்தர்களாவீர்கள். என்று பிர்மதேவனுல் உத்திரவு செய்யப்பட்ட புண்ணிய தீர்த்தங்களெல்லாம் பிரதி வருஷமும் வைசாக பூர்ணிமையில் ஸத்திய புஷ்கரிணியில் ஸநாநம் செய்து தங்களிடம் சேர்ந்திருக்கும் ஜனங்களின் பாவங்களை நீக்கிக்கொள்ளுகின்றன. (௩௮)

ஆகையால் அந்த ஸத்திய புஷ்கரிணீதீர்த்தமானது எல்லா தீர்த்தங்களிலும் சிறந்தது என்றறியும். தவிரவும் அதினருகில் "புஷ்பபத்திரை" என்ற ஒரு நதியானது அதுபோன்ற மகிமையுடையதாய்ச் செல்லுகிறது. அந்த புஷ்பபத்திரை நதியின் கரையில் பிதுருதேவதைகளுக்குச் செய்யும் திலதர்ப்பணமாவது பிண்டதானமாவது செய்தால் கயையில் செய்த சிரார்த்தபல முண்டாகும். அவ்விடத்தில் ஓர் பெரிய ஆலமரமானது, சென்றது, நடக்கிறது, வருவது ஆகிய முக்காலத்திலு முள்ளதை நன்ருய்த் தெரிந்ததாய் தனது கிளைகளினுல் எல்லாப் பிராணிகளின் நடப்பையுந் தெரிவிக்கும். அம்மரத்திற்கு கிருதயுகத்தில் "பத்திரவடம்" என்றும், திரேதாயுகத்தில் "விருக்ஷராஜன்" என்றும், துவாபரயுகத்தில் "புத்திரதீபம்" என்றும், கலியுகத்தில் "பநஸம்" என்றும் பெயர் ஏற்படுகிறது. எவ்வருஷத்தில் அரசனுக்கும் ஜனங்களுக்கும் தனம், தான்யம், மக்கள் இவைகளின் அபிவிர்த்தி ஏற்படுமோ அவ்வருஷத்தில் அந்த மரத்தின் பெருங்கிளை சிறுகிளைகள் நன்ருய்த் தழைத்துப் பழங்களின் அபிவிருத்தியும் ஏற்படும். (௪௩)

எப்பொழுது அம்மரத்தின் கிளையானது முறியுமோ அக்காலம் அத்தேசத்தரசனுக்குக் கெடுதியும், சிறுகிளை முறிந்தால் மந்திரிக்குக் கெடுதியும் எற்படும். எவ்வருஷத்தில் அந்த மரத்தில் பழங்களில்லாமலிருக்குமோ அவ்வருடத்தில் மழைக்குறைவு எற்படும். அதின் பச்சை இலையானது விழுந்தால் அப்பொழுது பிராணிக்குக் கெடுதி எற்படும். இத்தகைய மகிமையுடைய ஸத்தியகிரியின் சிகரத்தை வெகு தூரத்திலிருந்தாவது எவன் பார்க்கிறானோ அவனுடைய கண்ணுக்குமுன் யமபடர்கள் வருவதற்குச் சக்தியற்றவராவார்கள். அன்றியும் திருமார்பில் லக்ஷ்மீதேவியைத் தரித்த ஸ்ரீஸத்தியமூர்த்தியின் அழகு பொருந்தியதும் ஸர்வமங்களத்தை தரக்கூடியதுமான திருமேனியை எவர்கள் அரை க்ஷணமாவது தர்சனம் செய்கிறார்களோ அவர்கள் யமனது உருவத்தை காணார். அதிக புண்ணியத்தைத் தரக்கூடிய இந்த ஸத்தியக்ஷேத்திரத்தில் எப்பொழுதும் வாஸம் செய்கிறவரே "ஸத்தியலோகம்" என்ற பிரமனுலகில் பிர்மாவுடன் சேர்ந்திருப்பர். ஸத்திய கிரியை அன்புடன் பிரதக்ஷணஞ் செய்யுமவன், பலத்தை விரும்பினவனாகில் தனது இஷ்டங்களையெல்லாம் யடைவன். பலத்தை விரும்பாவிடில் பிறப்பிறப்பாகிய துக்கம் விலகப்பெற்று நித்தியானந்த ரூபமான மோக்ஷமடைவன். என்ற மகேசனை நாரதர் வினவுகிறார். (சகூ)

ஓ மகேசுவரனே! அந்த க்ஷேத்திரமானது எந்தக் காரணத்தினால் ஸத்தியக்ஷேத்திர மென்று பெயர்பெற்றது? இதற்குமுன் இந்த ஸ்தலத்திற்கு என்ன பெயர்? இதை நன்றாய்ச் சொல்லவேண்டு மென்ற நாரதருக்கு மகேசுவரன் கூறுகிறார். (ரு0)

நாரத! முன் காலத்தில் இந்த பூலோகம் அஸுரர் ராக்ஷஸர் என்னும் இவர்களால் வியாபிக்கப்பட்ட ஸமயத்தில் ரிஷிகளெல்லோரும் மிகவும் பயந்து மலைகளின் குகைகளில் மறைந்தார்கள். (ருக)

உலகத்தில் யாகம் முதலிய நல்ல காரியங்கள் ஒன்றும் நடக்கவில்லை. அதனால் தேவர்கள் மெலிவடைந்தார்கள். ஸத்தியம் தர்மம் என்னும் இவைகளுக்கும் வறுமை நேரிட்டது. அக்காலத்தில் தர்மதேவதை காளையின் உருவம் கொண்டு அழகர் கோவிலையடைந்தது. ஸத்தியதேவதை மான்வடிவுகொண்டு வேணுவனமாகிய (மூங்கிற்காடாகிய) இந்த ஸ்தலத்தை யடைக்தது. (ருஉ)

இங்கு ஸத்தியகிரிஸ்வரூபனாய் அழிவற்ற வுருவத்தையுடைய பகவானைப் பூசித்துக் கொண்டு அசுரராக்ஷஸர்கள் நாசத்தை அடையவேண்டுமென ஸத்தியபுஷ்கரணிக் கரையில் தவம் செய்து வசித்தியடைந்தது. (ருங)

ஆகையால் இந்த க்ஷேத்திரமானது முன் "வேணுவநம்" என்று பெயர் பெற்று இப்பொழுது ஸத்தியதேவதை தவம் செய்து ஸித்திபெற்றது பற்றி, "ஸத்தியக்ஷேத்திரம்" (திருமெய்யம்) என்று பிரஸித்திபெற்றது. பின்னும், இந்த (1) க்ஷேத்திரம் (2) கிரி (3) வனம் (4) தீர்த்தம் (5) புரம் (6) மூர்த்தி என்னும் இவ்வாறுகளும் "ஸத்திய" என்ற பதத்தோடு சேர்த்தே சொல்லப்படுகின்றன. அதாவது (1) ஸத்தியக்ஷேத்திரம். (2) ஸத்தியகிரி. (3) ஸத்தியவனம். (4) ஸத்தியதீர்த்தம். (5) ஸத்தியபுரம். (6) ஸத்தியமூர்த்தி. என்று கூறப்படுகின்றன வென்பதாம். (ருரு௰)

பகவத்தியானம் செய்யும் ரிஷிகணங்களால் ஸேவிக்கப்பட்ட ஸத்தியக்ஷேத்திரத்தில் ஸத்தியகிரியின் தாழ்வரையில் ஸத்திய புஷ்கரிணியின் கரையில் மகிமை தங்கிய ஸர்ப்பநதியின் ஸமீபத்தில் (ஸர்ப்பநதி=பாம்பாறு) இமவத்பர்வதத்திலுண்டான சித்திரசிலையால் செய்யப்பட்டதும் புண்ணியபுருஷர்களால் அடையத்தக்கதுமான "ஸோமச் சந்தம்" என்ற விமானத்தில் ஸ்ரீஸத்தியமூர்த்தி" என்ற பகவான் மேன்மையுடன் விளங்குகிறார். (ருசு௰)

என்று பிர்மாண்ட புராணத்தில்

மகேசுவரநாரத ஸம்வாதத்தில்

ஸத்தியக்ஷேத்திர மகிமையில்

முதல் அத்தியாயம்

பூர்த்தி பெற்றது.

---

ஸ்ரீ ஸத்திய மூர்த்தயே நம:

## இரண்டாவது அத்தியாயம்.



ஸ்ரீநாதமகரிஷி, மகேசனை நோக்கி ஓ சம்போ! ஆதிசேஷன், சந்திரன், கருடன், ஸத்தியமகரிஷி, புரூரவன் என்னும் இவர்கள் இந்த ஸத்திய க்ஷேத்திரத்தில் தவம் செய்து ஸித்திபெற்றதாய்த் தாம் அருளிச் செய்தீர். அவர்களின் சரிதத்தை யான் உணராதவ

ஞகையால் விஸ்தாரமாகக் கூறவேண்டும் என்ற நாரதரைக் குறித்து மகேசுவரன் அருளிச்செய்கிறார். (க)

கைலாஸமலைபோல் வெளுத்த சரீரத்தோடும் மூன்றுலக்ஷம் யோஜனை நீளத்துடனும் ஆயிரம் தலைகளால் இந்த உலகத்தைத் தாங்கி நிற்கும் ஸர்ப்பத்திற்கு "அநந்தன்" என்றும் (ஆதிசேஷன் என்றும்) பெயர். தனது சரீரங்களில் விளங்கும் ரத்தினங்களுடைய காந்தியினல் மற்ற தேஜஸ்ஸையும் இருளையும் போக்கிக்கொண்டு நாற்பதினயிரம் யோஜனை பருமனேடு விளங்கும் அநந்தனுக்கு ஆதாரமாகக் கூர்மம் ஒன்று (கூர்மம்=ஆமை) ஏற்பட்டிருக்கிறது. எந்த அநந்தனுடைய உடலில் பரமபுருஷன் சயனம் செய்திருக்கிறரோ அவ்வநந்தனுக்குத் தான் "ஆதிசேஷன்" என்னும் பிரஸித்தியுண்டு. அந்த ஆதிசேஷனுக்கு கோபம் முதலிய தமோகுணம் மேலிட, தன் உடலில் சயனித்திருக்கும் விஷ்ணுவை வணங்கிச் சொல்லுகிறன். (உ—ச இ)

எல்லாவுலகங்களுக்கும் நாதனும் தன்னையடைந்தவர்களைக் கைவிடாமல் ரக்ஷித்துக்கொண்டு தானும் குறைவற்றிருப்பவனும், லக்ஷ்மீதேவிக்கு நாயகனுகவிருப்பதால் ஸகலஜகத்தின் உற்பத்திக்குக் காரணப் பொருளாயும், தாமரை மலரில் ஜனித்த அந்த மகாலக்ஷ்மியினிடத்தில் அன்புடையவருமான தாம் அடியேனிடத்தில் மிகவும் கிருபை கூர்ந்தருளவேண்டும். ஞானஸ்வரூபனுன ஸ்வாமி! தம்மையடைந்தவர்களுக்கு ஞானக்குறைவு ஏற்படுவது தகுதியற்றது. ஆகையால் தீக்குணமுடைய வெனக்கு நற்குணம் எப்படியுண்டாகும்? என்று வேண்டிக்கொண்ட ஆதிசேஷனைக் குறித்து பகவான் சொல்லுகிறர். (ரு—சு இ)

எல்லா ஸர்ப்பங்களுக்கும் உத்தமனுன ஆதிசேஷனே! உனக்கேற்பட்டிருக்கும் இந்த தமோகுணமானது ஸர்ப்பஜாதியிற் பிறந்ததால் வந்தது. ஆகிலும் என்னுடைய அனுக்கிரஹத்தால் உனக்கு ஸத்துவகுணமுண்டாகும். ஓ ஸர்ப்பராஜனே! அந்த நற்குணத்தோடு தவத்தைச் செய்யும். பரிபூர்ணமான அத்தவத்தால் சப்தப்பிர்மமான வேதத்தின் அர்த்தமறிவீர். அந்த வேதார்த்தத்தின் நிலையினுல் பரப்பிர்மத்தையடைவீர். அந்த பிர்மத்தையடைவதற்குக் காரணமான வேதார்த்த ஞானம் நற்றவத்தாலின்றி யடையத் தக்கதில்லை. (எ—கூ இ)

ஆகையால் ஓ ஆதிசேஷனே! கர்மபூமியான பாரததேசத்தில் நீரும் பெருந்தவத்தைச் செய்யவேண்டும் என்ற பகவானை நோக்கி ஆதிசேஷன் வினவுகிறார். (கய)

ஜனங்களுக்கிதத்தைச் செய்யும் ஸ்வாமி! அந்த பாரததேசத்தில் எந்த க்ஷேத்திரத்தில் எந்த மந்திரத்தோடு எவ்வித நியமத்துடன் எத்தொழிலைச் செய்துகொண்டு எத்தனை காலம் என்னால் தவம் செய்யப்படவேண்டும்? என்ற ஆதிசேஷனுக்கு பகவான் கூறுகிறார் (கக)

சேஷனே! நீ எனக்கு எப்பொழுதும் எங்கும் அடிமை செய்வதிலேயே விருப்பமுடையவன். நானோ உன்னையே பார்த்திருப்பதில் ஆவலுடையவன். ஆகையால் நீடித்தகாலம் தவம் செய்யும்படி உன்னை விட்டிருப்பது உசிதமில்லை. புத்தியிற் சிறந்த ஆதிசேஷனே! சீக்கிரத்தில் வித்தியைத் தரக்கூடிய க்ஷேத்திரத்தில் மேன்மை பொருந்திய அஷ்டாக்ஷர மந்திரத்தால் என்னையே பூஜித்துத் தவம் செய்யும். அவ்வஷ்டாக்ஷர மந்திரமானது மந்திரங்களுக்குள் மிகவும் உயர்ந்தது. அதை ஒருவன் ஜபித்தால் "ஜன்மம்" (பிறப்பு) என்ற ஸம்ஸாரத்தில் நின்று நீங்குவன் அம்மந்திரத்தை யான் உனக்கு உபதேசிக்கிறேன். நீ நல்ல விருதம் செய்தவனாகையால் என்னையே உனது இருதயமாகிய தாமரைப்பூவின் மத்தியில் சங்கு, சக்கரம், கதை, முதலிய ஆயுதங்களைத் தரித்து நிற்குமவனாக நிலை நின்ற மனத்தோடு நினைத்து ஆராதியும். (கரு)

அப்படித் தியானம் செய்யும்போது என்னுடைய கோவிலிலாவது மலையின் ஸமீபத்திலாவது மனதைக் கவரக்கூடிய வஸ்துக்களும் ஜனங்களுமில்லாத விடத்தில் என்னை இருதயத்தில் நன்றாய் நிலைநிறுத்தி இந்த அஷ்டாக்ஷர மந்திரத்தை ஜபிக்கவேண்டும் (கசு)

மந்திரங்களுக்கு ரிஷி, சந்தஸ், தேவதைஎன்ற மூன்றும் வேண்டியதால் இம்மந்திரத்திற்கு ஸகல ஜீவாத்மாக்களையும் சரீரமாகவுடைய நானே ரிஷி, வேதத்தின் முக்கிய மந்திர தேவதையான காயத்திரீ சந்தஸ், உயர்ந்த வஸ்துவுக்கும் உயர்ந்தவனாய் நிற்கும் நானே தேவதை. (கஎ)

அம்மந்திரத்தின் முதலெழுத்தின் நிறம் வெளுப்பு. இரண்டாவது எழுத்தின் நிறம் சிவப்பு. மூன்றாவது அக்ஷரம் கருப்பு. நான்காவது அக்ஷரம் சிவப்பு. ஐந்தாவது அக்கரம் குங்கும நிறம். ஆறாவது அக்கரம் பொன்னிறம். ஏழாவது வர்ணம் மை நிறம். எட்டாவது வர்ணம் சிவப்பு வெளுப்புக் கலந்தது. (கஅ—கக)

இவ்வெட்டெழுத்துக்களையுடைய "அஷ்டாக்ஷரம்" என்ற மந்திரமானது அன்புடன் ஜபிக்குமவர்களுக்கு இவ்வுலகில் வேண்டிய செல்வம் முதலிய எல்லா நன்மைகளையும் மேலான சுவர்க்கத்தையும் அதின் மேலான மோக்ஷத்தையும் தரும். (உ௦)

இம்மந்திரம் அநாதியானது. வேதத்தின் சிகரமான உபநிஷத்தில் சொல்லப்பட்டது. ஜபிக்கிறவர்களின் ஸகல பாவங்களையும் போக்கும். செல்வத்தையுந் தரும். எல்லா மந்திரங்களுக்குள்ளும் மேன்மையுள்ளது. (உக)

காலை மாலைகளில் செய்யும் அனுஷ்டானத்திற்குப் பின்பு என்னையே இடைவிடாது நினைத்துக்கொண்டு இவ்வெட்டெழுத்தையும் ஜபிக்கிறவர்களிடம் பாவமென்பதே அணுகாது. (உஉ)

இதுவே முக்கியமான மந்திரம். இதை ஜபிப்பதே உத்தமமான தவம். இதுவே சுவர்க்கத்தைத் தரும். அதிலும் சிறந்த மோக்ஷத்தையுமளிக்கும். (உங)

எல்லா வேதங்களின் உண்மைப் பொருள்களினின்றும் ஸாரமானதாக எடுத்து என்னாலேயே பக்தர்களின் நன்மைக்காக மந்திரராஜனாக முன்னமேயே அமைத்துவைக்கப்பட்டது. (உச)

இப்பொழுது நான் உபதேசிக்கிறேன். இம்மந்திரத்தை முன் சொன்ன ரிஷி, சந்தஸ், தேவதை அக்ஷரங்களின் நிறம் முதலியவைகளுடன் நினைத்துக்கொண்டு ஸத்திய க்ஷேத்திரத்தில் (திருமெய்யத்தில்)ஸத்திய கிரியில் ஸத்திய புஷ்கரிணிக் கரையில் ஜபம் செய். (உரு)

அப்படி ஜபிப்பதில் ஒரு லக்ஷம் ஆவர்த்தி செய்தால் அம்மந்திரம் ஸித்தியடையும். இரண்டு லக்ஷம் ஜபித்தால் சுவர்க்கலோகம் கிட்டும். மூன்றாவது லக்ஷம் ஜபித்ததினால் என்னுடைய லோகமான வைகுண்டமடைவதாகிய 'ஸாலோக்ய முக்தியை' யடையலாம். நான்காவது லக்ஷத்தால் என் ஸமீபத்திலிருப்பதாகிய "ஸாமீப்ய முக்தி" கிட்டும். (உகூ—உஎ)

ஐந்தாவது லக்ஷத்தால் என்னைப்போல் சங்கு, சக்கரம் முதலிய திவ்வியாயுதங்களுடன் நான்குதோளோடு பீதாம்பரமணிந்து விளங்கும் ரூபத்துடனிருப்பதான "ஸாரூப்ய முக்தி" பெறலாம். ஆறாவது லக்ஷத்தால் என்னிடத்திலே நிலைநின்ற சித்தமுடையவனாவன். (உஅ)

ஏழாவது லக்ஷத்தால் ஜீவாத்மாவான தன் ஸ்வரூபம் நன்றாய் விளங்கும். எட்டாவது லக்ஷம் ஜபித்து பூர்த்தியானால் என்னுடன் ஒன்றாய்க் கலந்து பரமாநந்தத்தை அனுபவிப்பதான "ஸாயுஜ்ய" ரூபமான மோக்ஷத்தை அடைவன். (உகூ)

ஆகையால் உனக்கு ஸத்வகுண முண்டாகவேண்டுமானல் எல்லாத் துன்பங்களையும் விலக்கி இன்பத்தையே தரும் இவ்வஷ்டாக்ஷர மந்திரத்தை நீ ஜபித்திரு. (௩0)

என்று பகவான் சொன்ன வார்த்தையைக்கேட்ட ஸர்ப்பராஜனை ஆதிசேஷன் லக்ஷ்மீகாந்தனை பகவானை நமஸ்கரித்துவிட்டு அனுமதி பெற்றுக்கொண்டு தவம் செய்வதற்காக ஸத்திய கிரியை நோக்கிச் செல்ல எத்தனித்தான். (௩க)

"நான் இவ்வளவு சரீரத்துடன் பூலோகம் சென்றால் அங்குள்ளவர்கள் பயமடைவார்கள்" என்றெண்ணி அதிசீக்கிரமாக தன் சரீரத்தை ஒடுக்கிக்கொண்டு, ஆயிரம் சிரங்களை விட்டு, ஐந்து தலைகளுடன் ஒருபாக நீளத்தால் அளவிடத்தக்க பருமனும் ஒரு பனைமரத்தின் நீளமுமான சரீரத்தைத் தரித்துக்கொண்டவனுகிப் பூமிக்குள்ளாகவே துளைத்துக்கொண்டு சிலதூரம் வந்து பிறகு அதில் நின்று வெளிப்பட்டுத் தோற்றினன். இவ்வாதிசேஷன் வந்த மார்க்கம் பள்ளமாகிவிட்டபடியால் இதுவே "ஸர்ப்பநதி" (பாம்பாறு) ஆகிவிட்டது. (௩உ—௩ச)

இவன் வெளிப்பட்டு வந்தவிடம் ஸத்திய க்ஷேத்திரமாக விருந்ததால் உடனே ஸத்தியகிரியை அடைந்து, ஸத்திய புஷ்கரிணியில் ஸ்நாநம் செய்து, அதின் கரையில் முன் பகவானல் சொல்லப்பட்ட கிரமப்படியே தவம் செய்தான். (௩௫)

அவ்விதம் ஆதிசேஷன் செய்ததவத்தால் பகவான் சந்தோஷமடைந்து, அளவிடமுடியாத வடிவையுடையவராய் ஸகல பிராணிகளையும் ரக்ஷிக்கும் ஸ்வபாவமுள்ள "ஹயக்கிரீவ" ரூபத்துடன் தர்சனம் கொடுத்தார். (ஹயக்கிரீவன்=குதிரை முகங்கொண்ட வித்தைகளுக்கு தேவதையான அவதாரம்.) (௩௬)

ஆதிசேஷனும் சந்திரபிம்பம்போன்ற காந்தியுடன் விளங்கும் ஞானரூபியான ஹயக்கிரீவரை சந்தோஷத்துடன் தலைகளால் வணங்கித் துதிசெய்கிறுன். (௩எ)

ஒ லக்ஷ்மீபதியே! இவ்வுலகமெல்லாம் தானேயாய் அவைகளுக்கு ஈசனுய், அவைகளில் எங்கும் இடம்விடாது வியாபித்தும், அவைகளின் சுகதுக்கங்கள் தன்னை அணுகாது தான் குறைவற்று தன்னை அடைந்தவர்களைக் கைவிடாமலும், தனது ஆஞ்ஞையை எப்பொழுதும் எங்கும் நடத்தியும், கருணையுள்ளவர்களில் சிறந்தும் மகாபலியிடம் மண்ணிரக்க வாமனவேஷம் தரித்தும், யஞ்யஸ்வரூபனுய் எஜமானனுகி, அஞ்ஞானத்தைப்போக்கியும், ஞானமிருத

ரூபியாயும், பக்தர்களின் இஷ்டத்தை அளித்தும், எல்லாருடைய இருதயத்திலும் நித்தியமாய் வஸித்தும், ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் ஆகிய குணங்களை யுடையராயும், நிற்கும் ஸர்வேசுவரனை தேவரீர் அடியனுடைய எண்ணத்தை அறிந்து பூர்த்திசெய்தருள வேண்டுமென்ற ஆதிசேஷனை நோக்கிப் பகவான் கூறுகிறார். (௩அ—௪0)

அகில புவனங்களையும் ஆயிரம் தலைகளால் தாங்கி இப்பொழுது ஐந்து சிரங்களோடு நிற்கும் ஆதிசேஷனே! முன் திருப்பாற் கடலில் என் முன்னாக உன்னால் எது பிரார்த்திக்கப்பட்டதோ, அதற்காக உனக்கு வேதப்பொருளின் உண்மையான அறிவு உண்டாகக் கடவது. என்ற பகவானை நோக்கி, ஆதிசேஷன் "கேசி" என்ற அசுரனைக் கொன்று நீண்முடியுடன் விளங்கும் ஜகத்பதியான ஹயக்கிரீவனே! தமதருளினால் நான் கோரியபடி பலம் பெற்றேன். என் தவம் ஸித்தித்தது இந்த க்ஷேத்திரத்திலென்றும் பிரஸித்தி ஏற்படவேண்டும். ஆகையால் திருப்பாற்கடலிற் போல் இந்த க்ஷேத்திரத்திலும் என்னுடலிற் சயனித்து ஆராதிக்கத்தக்க விக்கிரஹ ரூபமாய் எல்லோருக்கும் ஸேவைதந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கப் பகவானும் ஓ ஆதிசேஷனே! இந்த க்ஷேத்திரத்தில் உன்னால் பிரியமாயமைக்கப்பட்ட அர்ச்சா விக்கிரகத்தில் நம்மடியார்களுக்காகவும் ஆதிசேஷனால் பிரதிஷ்டை செய்யப்பட்டதென்ற உம்முடைய பிரஸித்திக்காகவும் நான் எப்பொழுதும் வாஸம் செய்கிறேன். என்று அங்கீகாரம் செய்தார். (௪க—௪௪)

இவ்விதம் ஆசிருதரைக் கைவிடாத பகவானால் அருளிச்செய்யப்பட்ட ஆதிசேஷன் உலகத்தை ரக்ஷிக்கக் கருதினவராய் அதிசீக்கிரத்தில் சொல்லியமுறைப்படி விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்து அலங்கரித்தார். (௪௫)

பிறகு தன்னுடலினால் ஆஸனமும் அணையும் செய்து, ஐந்து தலைகளால் பாத்தியம், அர்க்கியம், ஆசனமனீயம் முதலியன கொடுத்து மனமாகிய சந்தணம் பூசி, தன் சிரங்களாகிய புஷ்பங்களால் பூஜித்து, வாசனைமிகுந்த வாய்க்காற்றினால் தூபம்கொடுத்து சிரோரத்தினங்களால் தீபம் காண்பித்து, நாக்குகளினால் ஆலவட்டம் வீசி, படங்களால் குடைபிடித்து, தன்னுயிர்களால் அன்ன நிவேதனம் செய்து, அந்த விக்கிரகத்திற்கு இவ்விதம் ஆராதனம் செய்தார். (௪௬—௪அ)

பிறகு ஹயக்கிரீவ ரூபியான பகவான் இவைகளை எல்லாம் நேரில் கடாக்ஷித்து மனமகிழ்ந்து, பிறகு ஹயக்கிரீவ ரூபத்தை மறைத்து, சங்கு சக்கரம் முதலிய ஆயுதங்களோடு சதுர்புஜங்களுடைய வடிவைக்கொண்டு திருப்பாற்கடற்சென்றார். (சக)

அக்காலத்தில் ஆதிசேஷனும் குடையின் வடிவுகொண்டு ஆநந்தத்தோடு பின்சென்றார். (சகூ)

இவ்விதம் ஆதிசேஷனவன் அஷ்டாக்ஷரமாகிய உத்தம மந்திரத்தை ஜபித்து ஸ்ரீ ஸத்தியகிரிநாதனை சரணமடைந்ததினால் தாமஸகுணம் நீங்கி, அஞ்ஞானமாகிய பேரிருளை நீக்கத்தக்க வேதார்த்த ஞானவைபவத்தை அடைந்தார். (ரு௦)

என்று பிர்மாண்ட புராணத்தில்
மகேசுவரநாரத ஸம்வாதத்தில்
ஸத்திய க்ஷேத்திர மகிமையில்
ஆதிசேஷன் கதை என்ற
இரண்டாவது அத்தியாயம்
பூர்த்தி பெற்றது.

---

ஸ்ரீ ஸத்திய மூர்த்தயே நம:

## மூன்றாவது அத்தியாயம்.



நாரதமுனிவர் ஸ்ரீ பரமேசுவரனை நோக்கி, ஓ விருஷபத்துவஜனே! ஸத்திய க்ஷேத்திர மகத்துவமானது அஞ்ஞானமாகிய இருளை நீக்கி, மோக்ஷமார்க்கத்தைக் காட்டி ஆனந்தரூப மோக்ஷத்தைத் தருமென்பது நன்றாய்த் தெரியவருகிறது. (க)

ஆகையால் அத்திரி மகரிஷியின் நேத்திரத்திலுதித்த சந்திரனால் அங்கு எத்தவம் செய்யப்பட்டது? அதற்கு ஸாதனம் என்ன? பயன் யாது? இவைகளை அடியனான எனக்கு நன்றாய் அருளிச்செய்யவேண்டும். (உ)

என்ற நாரதரை நோக்கி பரமேசன் சொல்லுகிறார். மிகப் பாக்கியம் பெற்றவராய், "அனஸூயை" என்ற கற்புடை நங்கைக் குக் கணவரான "அத்திரி" என்று பெயர் பெற்ற முனிவர்.

பிரமனையும், விஷ்ணுவையும் என்னையும் ஆராதித்து, எங்களை யே புத்திரராகப் பெறவேண்டு மென்று வேண்டிக்கொள்ள, நாங்க ளும் அப்படியே ஸம்மதிக்க, விஷ்ணுவின் அம்சத்தால் "தத்தாத் திரேயர்" என்ற தவநிதி உதித்தார். (௪)

எனது அம்சத்தால் சாபத்தையே ஆயுதமாய்க் கொண்ட 'துர்வாஸர்' என்ற ரிஷியும், பிர்மாவின் அம்சத்தால் பிரகாசமுள்ள சந்திரனும் ஜனித்தனர்கள். (௫)

இவ்விதம் "மும்மூர்த்திகளையும் பிள்ளையாக அடைந்ததால் இந்த அத்திரி மகரிஷி புத்திரவான்களாகத் தவம் செய்து பலம் பெற்றவர்களில் சிறந்தவர்" என்று எல்லாத் தேவர்களும் கொண் டாடினர்கள். (௬)

அப்பொழுது அத்திரி ரிஷியும் புத்திரர்களை எடுத்து உச்சி முகந்து, ஜாதகர்மாதிகளைச் செய்து தவம் செய்ய க்ஷேத்திரம், மந் திரம், தொழில் என்னும் இவைகளை உபதேசித்தார். (௭)

இவ்விதம் பிதாவினால் கிரமப்படி உபதேசம் செய்யப்பட்ட மூன்று புத்திரர்களும் அத்திரி மகரிஷியை நமஸ்கரித்து, அவரிடம் விடைபெற்றுக்கொண்டு தவம் செய்ய அவரவர்களுக்கு ஏற்படுத் திய இடங்களை நோக்கிப் புறப்பட்டார்கள். (௮)

எவர்களாலும் ஆராதிக்க வரிய தன்மையுடைய துர்வாஸர் மகாயோகியாய் தவம் செய்ய கைலாஸ மலையையும், தத்தாத்திரே யர் இமயமலையின் தாழ்வரையையும், சந்திரன் ஸத்தியகிரி (திரு மெய்ய மலை)யையும் அடைந்தனர். (௯)

அச்சந்திரனும் அடக்கத்தோடு நற்குணங்களை அடைந்து பிதுருவாக்கியத்தில் பிரியமும் நம்பிக்கையும் வைத்து சுத்தமனத் துடன் ஊண் மறந்து, ஸகல பாவத்தையும் விலக்கும் ஸத்திய புஷ் கரிணி தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்துவிட்டு ஆசமனமும் செய்து கழுத்தளவு ஜலத்தில் நின்றுகொண்டு, செவி, வாய், கண், மூக்கு, உடல், மனஸு ஆகிய ஆறுபுலன்களையும் ஒடுக்கி, சூரியமண்டலத் திலே கண்வைத்து, உருக்கிவிட்ட தங்கம் போன்ற திருமேனியொ ளியும், குண்டலமணிந்த காதுகளும், கிரீடமணிந்த முடியும், தாம ரை மலர்போன்ற திருக்கண்களும், தோள்வளையோடு விளங்கும் புஜங்களும், "கௌஸ்துபம்" என்ற ரத்தினத்தையும், முத்துமாலை

துளஸீமாலைகளையு மணிந்த திருமார்புமுடையவராயும், பீதாம்பரம் தரித்தவராயும், சங்கு சக்கரம் முதலிய ஆயுதங்களைத் தரித்தவராயும் ஒளியுடன் விளங்கும் ஸ்ரீ நாராயணனைத் தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்குமவராக நிலைநின்ற மனத்தால் தியானம்செய்துசிறந்த மந்திரமான அஷ்டாக்ஷரத்தைக்கொண்டு, எங்கும் நிறைந்த பகவானுடைய உள்ளம் மகிழும்படியான தவத்தைச் செய்தான். (கசஇ)

பிறகு அருந்தவம் செய்யும் அந்த சந்திரனுடைய தவத்தைக் கண்டு, சந்தோஷத்தாலும் பிரியத்தாலும் அலர்ந்த தாமரைபோன்ற திருக்கண்களுடையவராய் தனது வலது கையில் தயிருடன் சேர்ந்த அன்னத்தையும், தாபத்தைப் போக்கும் அமிருத கும்பத்தை மற்றொரு கையிலும் தாங்கி வாமனவேடங்கொண்டு, (வாமனன்=சிறுவன்) சுத்தவர்ணத்தோடு வெளுத்த வஸ்திரம் தரித்து, வெண் தாமரைப்பூவை ஆஸனமாகக் கொண்டு சந்திரனுக்கு எதிரில் தோன்றி மேகம் முழங்குவதுபோல் கம்பீரமான குரலோடு சந்திரனை நோக்கி பகவான் சொல்லுகிறார். (கரு—கஎஇ)

பார்த்தவர்கள் மனதைக் கவரக்கூடிய வடிவையுடைய சந்திரனே! உன்னுடைய தவத்தால் யான் சந்தோஷித்தேன். உனது மனத்திலுள்ள வரத்தைக் கேள். உனக்கு மங்களம் உண்டாகக் கடவது. (கஅஇ)

அழகிய உருவத்தையுடைய நீ ஆகாரமின்றித் தவம் செய்கிறாயென்று அன்னமும் அமிருதமும் தருகிறேன். என்று கூறிய ததிவாமன பகவானை நோக்கி சந்திரன் வேண்டுகிறான். (ககூஇ)

ஓ லக்ஷ்மீபதியே! தமது தர்சனத்தால் மிகவும் திருப்தியடைந்தேன். பொருள் படைத்தேன். கருணைக்கடலே! தம்மையடைந்தவர்களுக்கு கிடைக்க வரியதொன்றுண்டோ? (உ0இ)

தேவரீர் சூரியமண்டலத்திலும் ஸத்திய கிரியிலும் எப்படி நித்தியவாஸம் செய்கிறீரோ அவ்விதமே எனது மண்டலத்திலும் எனக்கு தர்சனம்கொடுத்த இந்த ததிவாமனவேஷத்தோடு வஸிக்கவேண்டும். (உகஇ)

என்ற சந்திரனை நோக்கி பகவான் கூறுகிறார். ஓ சந்திரனே! நீ எவ்வரத்தை விரும்பினையோ அவ்வரத்தை யான் இப்பொழுதே தந்தேன். ஸத்திய க்ஷேத்திரத்திற்போல் உனது மண்டலத்திலும் வஸிக்கிறேன். (உஉஇ)

என்று சொல்லி, கருணாநிதியான் பகவான் சந்திரனுக்கு தர்சனம் கொடுத்தபடி ஸத்திய க்ஷேத்திரத்திலும் சந்திர மண்டலத்திலும் ராஜஹம்ஸம் வெண் தாமரையிலமர்ந்து வஸித்தல்போல் நித்தியவாஸம் செய்கின்றார். (உரு௫)

இவ்விதம் அத்திரியின் நேத்திரத்தினின்றும் பிரமனது அம்சமாய் ஜனித்த சந்திரன், பக்தர்களின் துரிதத்தை விலக்கும் விஷ்ணுவைப் பூஜித்து, தவத்தின் மகிமையால் தன்னெதிரில் தோற்றிய ததிவாமனனையே தன் மண்டலத்தில் நித்தியமாய்த் தரித்தான். என்று மகேசுவரன் நாரதருக்கு உரைத்தார். (உசு௯)

என்று பிர்மாண்ட புராணத்தில்
மகேசுவரநாரத ஸம்வாதத்தில்
ஸத்திய க்ஷேத்திர மகிமையில்
சந்திரன் கதை என்ற
மூன்றாவது அத்தியாயம்
பூர்த்தி பெற்றது.



ஸ்ரீ ஸத்திய மூர்த்தயே நம:

## நான்காவது அத்தியாயம்.

ஸ்ரீ நாரதமகரிஷி ஸ்ரீ பரமேசனை நோக்கி தேவர்களுக்கீசனாகிய ஸ்வாமி! தமது அமிருதம் போன்ற வாக்கை எவ்வளவோ கேட்டும் எனக்குத் திருப்தி பிறக்கவில்லை. விநதையின் புத்திரனை கருடன் இந்த ஸத்திய க்ஷேத்திரத்தில் தவம்செய்து ஸித்தியடைந்ததைக் கேட்கவேண்டும் என்ற ஆவலிருப்பதால் அதை உரைத்தருளவேண்டும் என்றுசொல்ல மகேசுவரன் சொல்லுகிறார். (க)

ஓ நாரதரே! பிரஜைகளை உண்டுபண்ணுவதற்காக ஏற்படுத்தப்பட்டவராயும் பிரமனுக்கு ஸமானராயும் உள்ள காசியபரின் "கத்ரு" "விநதை" என்னும் இரண்டு மனைவிகள் ஒருவருக்கொருவர் அஸூயை உள்ளவர்களானார்கள். (உ)

ஒருநாள் இருவர்களில் விநதையானவள் தேவேந்திரனுடைய குதிரை வெளுப்பென்று சொல்ல, கத்ரு அது கறுப்பென்றாள். இருவர்களுக்கும் விவாதம் உண்டாகி, எவர் பக்ஷம் ஜயித்ததோ அவளுக்கு மற்றவள் அடிமை செய்யவேண்டியது. (௩)

அல்லது அவ்வடிமையை விலக்கிக்கொள்ளத் தேவாமிருதத்தைக் கொண்டுவந்து தரவேண்டியது. என்று உறுதி செய்து கொண்ட ஸமயத்தில் தேவராஜனும் இயற்கையாய் தனது "உச்சைசிரவஸ்" என்ற வெள்ளைக் குதிரையில் ஏறிவந்தான். (ச)

உடனே கத்ருவானவள் தனது புத்திரனை தக்ஷகன் என்ற ஸர்ப்பத்தைக்கொண்டு அக்குதிரையைக் கருமையாகச் செய்யச் சொன்னபடி தக்ஷகனும் வெண்மையை மறைத்தான். அக்காலம் கத்ரு, விநதையை அழைத்து அப்புரவியைக் காட்டி, தன் எண்ணப்படி முடிந்ததால் கர்வமடைந்து முன் செய்துகொண்ட உறுதிப்படி மிகவும்நல்லவளான விநதையை அடிமையாக்கிக்கொண்டு அதுமுதல் அவ்விநதையை கத்ரு கஷ்டப்படுத்திவந்தாள். (ரு—சு)

அடிமைத் தொழில்பூண்ட விநதையும் தனது பர்த்தாவான காசியபரிடம் கண்ணீர்விட்டழுது தன் வறுமையைத் தெரிவித்தாள். நல்ல தபோமகிமையுடையவரும் விநதையை ஸமாதானம் செய்து சொல்லுகிறார். (எ)

ஓ விநதே! கத்ருவானவள், நீ சூதறியாதவளாகையால் தன் புத்திரனுடைய பலத்தினல் உன்னை ஜயித்துவிட்டாள். நீயும் உன் புத்திர பலத்தாலேயே அந்த கத்ருவைப் பலாத்காரமாய் ஜயிக்க வேண்டும். (அ)

ஆகையால் நான் இப்பொழுது தருகிற ஹவிஸின் மீதியை நான்கு கவளமாய்ப் புசித்தால் நான்கு புத்திரர்களைப் பெறுவாய். அவர்களில் ஒருவன் அதிக பராக்கிரமமுள்ளவனுக இருப்பன். (கூ)

என்று இவ்விதம் தனது பர்த்தாவினல் ஸமாதானம் செய்யப்பட்ட விநதை அந்த அன்னத்தைச் சாப்பிட்டு கர்ப்பந்தரித்து நான்கு முட்டைகளைப் பெற்ருள். (கo)

அவைகளில் இரண்டு முட்டைகளை ஆவலினல் தானே உடைத்துப்பார்க்க ஜலமாய்ச் சிதறிவிட்டன. பிறகு சிலகாலம் சென்று மற்றொன்றை உடைத்துப்பார்க்க அதினின்றும் அங்கக்குறைவாக ஓர் புதல்வன் தோற்றினன். இவ்விதம் மூன்று முட்டைகள் வீணகிவிட்டபடியால் மீதமான ஓர் முட்டையைப் பாதுகாத்திருந்தாள். அதில் நின்றும் பூர்த்தியான காலத்தில் சோதிமயமாய் உருக்கிவிட்ட தங்கம்போன்ற மேனியுடன் பருத்த சரீரமுடையவனுய்ப் பிறந்த புதல்வனைக்கண்டு அவ்விநதையானவள் ஆனந்த வெள்ளத்தின் எல்லை நிலத்தை அடைந்தாள். (கக—கஉ இ)

அங்கு காசியபரும் மனக்களிப்புடன் புத்திரனைக் கண்ணாக் கண்டு, அத்திரி முதலிய ரிஷிகளையும் இந்திரன் முதலிய தேவர்களையும் பார்த்துச் சொல்லுகிருர். (கரு இ)

இப்புத்திரன் ஸாமவேதரூபி, இவனுடையமுகம் வேதங்களின் சுருக்கமான பிரணவமே, இவனது கண் ருக்குகளின் ஸமூகமாக விருக்கின்றது, சிரஸ் காயத்திரீ, "பிரஹத்ஸாமம், ரதந்தரஸாமம்" என்ற இரண்டு ஸாமங்களும் இவன் சிறகுகள், சரீரமோ "வாமதேவ்யம்" என்ற ஸாமம். (கரு)

இவனுடைய அவயவங்கள் வேதச் சந்தங்கள், இந்த பால்யத்திலேயே மகாபுத்திமானுய் தனது தாய்க்கும் தேவர்களுக்கும் துக்கத்தைப் போக்க விசேஷமாக தர்மஸ்வரூபியாய் ஜனித்த இச்சிறுவனை ரிஷிகளே! நன்ருய்ப் பாருங்கள். (கசுஇ)

என்றிவ்விதம் சொல்லிக்கொண்டிருக்கும் பிதாவை சுவர்ண நிறம்போன்ற "கருடன்" என்று பெயரிடப்பெற்ற பாலகன் நமஸ்கரித்து, ஸ்வாமி! காலாக்கினிபோன்ற கொடும்பசியால் வருந்துகிறேன். அப்பசி நீங்கித் திருப்தியுண்டாகும்படி உரைத்தருள வேண்டும். என்ற கருடனுடைய வார்த்தையைக் கேட்டு காசியபர் சொல்லுகிருர். (கஎஇ)

ஓ கருட! பிர்மாவினுல் செய்யப்பட்ட "ஸோமஜித்" என்ற யாகத்திற்காக ஏற்படுத்தப்பட்டநெய்க்குளத்தில் ஓர்ஆமையானது ஸஞ்சரிக்கிறது. அதைப் பிடித்து விழுங்கிப் பசிதீர்த்துக்கொள். (கஅஇ)

பசி தீர்ந்தபின் உன் தாயின் அடிமையை விலக்கவேண்டி அமிருதத்தைக் கொண்டுவர வேண்டியதற்குத் தக்க முயற்சி எடுத்தவனுய், சீக்கிரத்தில் தவத்தின் ஸித்தியைக் கொடுக்கும் ஸித்திகரமென்று பெயர் பெற்ற ஸத்திய க்ஷேத்திரத்தில் நீ தவம் செய்ய வேண்டும் (கக்ஷஇ)

என்று பிதாவினுல் மேல் செய்யவேண்டிய காரியத்தைப் பற்றி உத்தரவளிக்கப்பட்ட கருடன் தன் தாய்தந்தையரிடம் மனஸுடன் விடைபெற்றவராய் பருத்த சரீரத்துடன் அதிவேகமாய் நெய்க்குளத்திலிருக்கும் ஆமையை உத்தேசித்துப் பறந்து சென்று மிகவும் குரூரமான அவ்வாமையைத் தன்மூக்கு நுனியினுல் தூக்கி அக்குளத்தின் கரையிலிருக்கும் ஆலமரத்தின் மேல் வைத்துக் கொண்டு புஜிக்க யத்தனித்த ஸமயத்தில் அம்மரமானது பாரம் தாங்கமாட்டாமல் முறிந்தது. (உகஇ)

அங்கு மரத்தின்கீழ்த் தவம் செய்துகொண்டிருந்த முனிவர்கள் பெரும் கூச்சலிட, அவர்களை ரக்ஷிக்கவேண்டி முறிந்த கிளையைத் தன்னுடைய சிறகில் தாங்கிக்கொண்டு அவர்களை நோக்கி தான் வந்த காரியத்தைத் தெரிவித்தார். (உஉஇ)

பிறகு இதைக்கேட்ட முனிவர்கள் சந்தோஷமடைந்து பக்ஷி ராஜனை ஆசீர்வதித்தார்கள். கருடனும் அங்கு இஷ்டப்படி அவ்வாமையை புஜித்துவிட்டு சீக்கிரமாய்த் தவம் செய்யவேண்டி ஸத்தியகிரியின் தாழ்வரையை அடைந்தார். (உ௫இ)

வக்த உடன் பிதாவான காசியபரால் நியமிக்கபபட்டபடி ஸத்திய புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து அஷ்டாக்ஷர மந்திரத்தால் ஸகல துரிதங்களையும் நீக்கும் ஸத்தியகிரி நாதனை பகவானைத் தியானம் செய்து நிலைநின்ற மனத்தோடு தவம் செய்தார். (உ௬)

பிறகு தேவர்களுக்கும் தேவனாய், அடியார்களைக் கைவிடாமல் குறைவற்ற பகவான் கிருபைகூர்ந்து, நீருண்டமேகம்போன்ற திருமேனியொளியுடன், பிதாம்பரமணிந்து, சங்குசக்கரம்முதலிய திவ்வியாயுதங்களைக் கையிலேந்தி ஸ்ரீ லக்ஷ்மீதேவியுடன், திவ்விய விமானத்திலேறி நின்று ஸ்ரீ கருடாழ்வானுக்குத் தர்சனம் கொடுத்தார். (உ௬இ)

விநதாபுத்திரனை கருடனும் நித்திய ஞானனந்த ஸ்வரூபனாய், ஜகன்னாதனை பகவானைக் கண்ணாரக்கண்டு பணிந்து, அவருடைய அமிருதம்போன்ற கடாக்ஷத்தால் வந்த ஞானவெள்ளத்தில் மூழ்கினவராகி நன்கமைந்த வசனங்களால் துதிசெய்கிறார். (உ௮)

ஸ்ரீ லக்ஷ்மீகாந்தனாய், தேஜஸ்களுக்கு ஸ்தானமாய், ஜகத்குருவாய், ஞானஸ்வரூபியாய், கார்மேகம்போன்ற திருமேனியுடைய தாம் எல்லோருக்கும் மேலாய் விளங்கவேண்டும். மது, கைடபன் என்னும் அசுரர்களுக்குச் சத்துருவாய், தானவர்களாகும் பேரிருளுக்கு சூர்யனுமான தமக்கு நமஸ்காரம். (உ௯)

ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குண காரியமான இவ்வுலகம் ரஜோகுணத்தை அடைந்த தம்மால் உண்டுபண்ணப்பட்டுப் பின் ஸத்துவகுணமுடைய தம்மாலே ரக்ஷிக்கப்பட்டுப் பின் தமோகுணத்தை யடைந்த தம்மால் காரணவஸ்துவில் லயம் அடையும்படி செய்யப்படுகிறது. (௩0)

வேதமானது தமது ஓர் ஆனந்த குணத்தைக் காணக்கருதிச் சென்று கரைகாணாது மனஸுடன் எதில்நின்றும் மீண்டதோ அவ்வானந்த குணத்தோடுகூடிய தமது ஸ்வரூபத்தை ஸ்ரீவைகுண்டத்தில் நித்திய ஸூரிகள் எக்காலமும் கண்டுகளித்து, சிறந்த தமது எந்த பாதத்தையே பற்றி நிற்கிறார்களோ, அப்பதத்தை யானும் ஸேவிக்கிறேன். (௩க)

இப்புவனத்தில் மனனசீலர்களான ரிஷிகள் எப்பொழுதும் எவனையே ஆசிரயிக்கிறார்களோ, சுவர்க்கலோகத்தில் தேவகணங்கள் பெரிய வாபத்காலத்தில் எவனைப் பற்றுகிறார்களோ, மேலுலகங்களிலுள்ள ஸநகாதியோகிகள் கருணாநிதியான எவனையே தியானம் செய்கிறார்களோ (இப்படி மனிதர்கள், தேவர்கள், யோகிகள், இவர்களால் பூவுலகு, வானுலகு, மேலுலகுகள் இவைகளில் வணங்கப்படுகிற) தேவருக்கும் தேவனான தம்மையே என் மனம் விரும்புகிறது. (௩௨)

தாம் அகுணனாகியும் குணநிதியாகிறீர். (தீக்குணமற்று நற்குணமுடையவராகிறீர்) யௌவனமுள்ளவனாகியும் கிழவனாகிறீர். (நித்தியயுவாவாய், ஜகத்பிதாவான பிரமனுக்கும் பிதாவாகிறீர்.) நல்ல ரூபத்தையுடையனாகியும் கலையற்றவனாகிறீர். (நல்ல ரூபத்துடன் குறைவற்றவனாகிறீர்.) ஆதியாகியும் அனாதியாகிறீர். (தானே ஜகத்துக்குக் காரணமாய் தனக்கு வேறு காரணமற்றிருக்கிறீர்) இவ்விதம் பெருமை பொருந்தி மேலோருக்கும் மேலாய் நிற்கும் தம்மையே என் மனம் ஆசைப்படுகிறது. (௩௩)

தமது நேத்திரத்திலிருந்து சூரியனும், தம் மனத்திலிருந்து சந்திரனும், முகத்திலிருந்து இந்திரனும் அக்கினியும் உண்டாக, தாம் முடிகளாயிரமும், கண்களாயிரமும், தோள்களாயிரமும், தாள்களாயிரமும், பேர்களாயிரமுமாக "விராட்" புருஷரூபமாய் விளங்குகிறீர். (௩௪)

ரத்தினத்துடன் பிரகாசிக்கும் சுவர்ணகிரீட குண்டலங்களால் விளங்கும் பாலசூர்யன்போன்ற திருமேனி யொளியும், சரத்காலத்தில் விளங்கும் சந்திரனைப்போன்ற திருமுகமண்டலமுமுடையனாய், தேவர்களுக்கும் நித்திய ஸூரிகளுக்கும் அளவற்ற ஆனந்தத்தைத் தருமவனுமான தம்மை நமஸ்கரிக்கிறேன். (௩௫)

இவ்விதம் துதிசெய்த கருடனை நோக்கி பகவான் கூறுகிறார். விநதையின் தநயனான கருடனே! நீ இவ்விளமையிலேயே மனதில் குற்றமற்று வேதாந்தமான உபநிஷத்துக்களின் அருமைப் பொருளை யறிந்து கூறுகிறவனாய் மிகச்சதுரனுமாயிருக்கிறாய். உனது ஸ்தோத்திரத்தாலும் தவத்தாலும் திருப்தியடைந்தேன். (௩௬)

உனக்கு வேண்டுவதைத் தருவதாகவே நான் உத்ஸாஹத்துடன் சீக்கிரமாய் வந்தேன். உன் தவப்பயனையடைவாய். உனக்கு வேண்டியதை என்னிடம் கேட்டுக்கொள். என்ற பகவானை நோக்கி கருடன் வேண்டிக்கொள்ளுகிறார். (௩௭)

கருணைக்கடலே! தேவரீர் என் தவப் பலத்தினால் நேரில் தோற்றினதினாலே நான் மிகவும் பொருள்பெற்றேன். இதைவிட வேறுவரம் எனக்கு வேண்டுவதில்லை. (௩௮)

ஆனால் என் தாயான விநதை அடிமைப்பட்டு வருந்துதலா லுண்டான பெருந்துக்கத்தால் அவளுடைய அடிமையை நிவர்த்தி செய்யவேண்டி அமிருதம் கொண்டுவர முயற்சி யுடையனாய், என் பிதாவான காசியபரின் உபதேசப்படி அமிருதம் கிடைக்க வேண்டித் தம்மைப் பூசித்தேன். (௩௯இ)

நான்முகன் முதலிய தேவர்களாலும், ஸநகாதியோகிகளா லும் காணமுடியாத தமது ஸ்வரூபத்தை இவ்விடத்தில் யான் கண்டேன். (௪0இ)

சரணமடைந்தவர்களின் ஆர்த்தியைப் போக்குமவராகை யால் என் தாய் அடிமை நீங்கி ஸுகிக்கும்படிக்கும், என் பிறப்பும் மாதாவுக்குப் பணிசெய்ததால் பயன்பெறும்படிக்கும் ஞானனந்த ஸ்வரூபனான தேவரீர் கிருபை செய்தருளவேண்டும். (௪௧இ)

என்று வேண்டிக்கொண்ட கருடனை நோக்கிப் பகவான் கூறு கிறார். கருடனே! போகமுடியாத மகாமேருவின் உச்சியில் முன்பு தேவர்கள் புஜித்துவிட்டு மீதமான அமிருதத்தை ஓர் கல சத்தில் நிரம்பவைத்து இந்திரன் முதலிய தேவர்கள் ரக்ஷித்து வருகிறார்கள். (௪௨இ)

அதிவேகமாய் அங்குச்சென்று காவலர்களெல்லோரையும் என்னுடைய ஆக்ஞையைக்கொண்டு ஜயித்து நிச்சயமாய் அமிரு தத்தைக் கொண்டுவருவாய். (௪௩இ)

அவ்வமிருத கலசத்தைக் கத்துருவினிடம் கொடுத்துவிட்டு உன் அன்னையை அடிமையில் நின்றும் விலக்கிக்கொள். அவ் வமிருதம் தேவதைகளுக்காக ஏற்பட்டதாகையால் பூலோகத் தாருக்குத் தக்கதல்ல. ஆகையால் நீ கத்துருவினிடம் கொடுத் தவுடன் அந்த கலசமானது சுவர்க்கலோகம் வந்துவிடும். (௪௫)

தவிரவும் அந்த கத்துருவின் புத்திரனான தக்ஷகனுடைய வஞ் சனையாலே உன் தாய்க்கு ஆபத்து நேரிட்டு அதிக கஷ்டமுண் டானதால் நீ அந்த கத்துருவின் புத்திரர்களான ஸர்ப்பங்களுக்கு யமனாகவே ஏற்படுவாய். (௪௬)

ஆனால் என்னிடத்தில் தவம் செய்து பக்தி செய்து வரம் பெற்ற அஷ்டநாகங்கள் மட்டில் ( அஷ்டநாகங்கள்—சேஷன், வாஸுகி, தக்ஷகன், சங்கபாலன், கார்கோடகன், குளிகன், பதுமன், மகாபதுமன் என்னும் இவர்கள் ) உனக்கு ஆபரணங்களாக நிற்பார்கள். அவர்கள் உன்னால் கொல்லப்படத்தக்கவர்களல்லர். (சஎ)

இவ்விதம் நீ அந்த அமிருதத்தை எடுத்துச் சென்று உன் மாதாவை அடிமையில் நின்றும் விலக்கிய பின் கலக்கமற்றவனாய் என்னையடைந்து எப்பொழுதும் என்னையே ஸேவித்திருப்பாய்.(சஅ)

என்ற பகவானிடம் கருடன் வினவுகிறார். ஷட்குணங்களால் நிறைந்து, பக்தவிரோதியான "கேசி" என்ற அஸுரனை வென்ற ஸ்வாமி! தமது கிருபையால் தன்யனானேன். ஆனால் இப்பொழுது எனக்கு உதராக்கினி ஜ்வலித்து பசி அதிகரிக்கிறது. அது நீங்கும் வகையை யருளிச்செய்யவேண்டும். (சகூ)

என்ற கருடனை நோக்கி பகவான் ஓ ஸுபர்ணனே! வடக்கு ஸமுத்திரத்தின் கரையில் "கிராதர்" என்ற துஷ்டஜாதியர் இருக்குமிடம் சென்று அவர்களை உன் பசிதீர உண்ணலாம். (ரு0)

அவ்விடத்தில் பிராமணனொருவன் ஜாதிப் பிரஷ்டனாய் அங்குள்ள கிராதஸ்திரீக்குப் பதியாயிருக்கிறான். அவனொருவனை மட்டில் விட்டு மற்றவர்களையெல்லாம் புஜித்துவிடு. (ருக)

என்று விடை கொடுக்கவும் பகவானை நோக்கி மதுசூதனா! நான் இப்பொழுது கண்ட இந்த திவ்யமங்கள ரூபத்தை எல்லோரும் விக்கிரஹரூபமாய் தர்சித்து நலம் பெறவேண்டியதற்காகத் தாம் எப்பொழுதும் இந்த க்ஷேத்திரத்தில் விக்கிரஹரூபமாய்எழுந்தருளி இருக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். (ருஉ)

பகவானும் ஓ பக்ஷிராஜனே! நீ நல்ல லக்ஷணம் பொருந்திய ஓர் பிம்பத்தை அமைத்துப் பிரதிஷ்டை செய்யும். நான் "வைகுண்டம்" என்ற கலங்காப்பெரு நகரில் எப்படி நித்தியமாய் வஸிக்கிறேனோ அப்படியே இந்த ஸத்தியக்ஷேத்திரத்தில் வஸிக்கிறேன்(ருங)

என்று பகவான் ஆக்ஞாபித்துவிட்டு அவ்விடத்திலேயே மறைந்தார். கருடனும் அப்பொழுதே திவ்யமான பிரதிமையை அமைத்து ஷோடசோபசாரத்துடன் பூஜித்து தங்கமலையொன்று கிளம்பியதுபோல் அமிருதத்தைக் கொண்டுவருவதற்குப் புறப்பட்டார். (ருசஇ)

இவ்விதம் விநதைக்குப் புத்திரனாக ஸாமவேதமூர்த்தியாய் அவதரித்த பக்ஷிராஜனாகிய கருடன் தன் மாதாவின் அடிமையை விலக்கவேண்டி நித்திய ஸூரிகளுக்குத் தலைவனான பகவானை ஸத்தியகிரியின் உச்சியில் தவத்தோடு ஆராதித்து அமிருதம் கொண்டுவரத் தக்க தேஜஸ்ஸையுடையராய் விளங்கினர். (ருருஇ)

என்று பிர்மாண்ட புராணத்தில்
மகேசுவரநாரத ஸம்வாதத்தில்
ஸத்தியக்ஷேத்திர மகிமையில்
கருடன் கதை என்ற
நான்காவது அத்தியாயம்
பூர்த்தி பெற்றது.

---

ஸ்ரீ ஸத்திய மூர்த்தயே நம:

## ஐந்தாவது அத்தியாயம்.

ஸ்ரீமகேசுவரனை நோக்கி நாரதர், சிஷ்யனுக்கு நன்றாய் எடுத்துரைக்குமவர்களுக்குள் சிறந்தவரான மகேசனே! தம்முகமாக பக்ஷிகளுக்கரசாகிய கருடனுடைய இஷ்டம் ஸித்தித்த விஷயம் என்னால் கேட்கப்பட்டது. பிறகு "ஸத்தியமகரிஷி" யின் சரித்தை கூறவேண்டுமென்று கேட்க மகேசுவரன் சொல்லுகிறார். (க)

தேவர்களால் மிகவும் விரும்பப்பட்ட இமாலயமலையில் நின்றும் வடபுரம் தாழ்வரையின் வழியாய் "புஷ்பபத்திரை" என்ற நதியானது ஓடுகிறது. அதின் கரையில் "சித்திரசிலை" என்ற பாறை யொன்றிருக்கிறது. அதினருகில் "பத்திரவடம்" என்ற ஆலமரமொன்றிருந்தது. அதினடியிலிருந்து "ஸத்தியதவர்" என்ற முனிவர் அங்கு குறைவற்றுத் தவம் செய்து வந்தார். அம் முனிவர் ஒருநாள் ஸமித்துக்கள் கொண்டுவர வேண்டிச் சென்று ஸமித்துகளை வெட்டும்போது வாளினால் தனது கைவிரலையும் சேர்த்துத் தானே வெட்டிக்கொண்டார். (உ—ச)

அப்பொழுது வெட்டுப்பட்ட அவருடைய விரலானது சாம்பற்பொடியாய்ப் பறந்ததேயொழிய ஊன், எலும்பு, மாம்ஸம், ரத்தம், சதை முதலியவைகள் ஒன்றும் காணப்படவில்லை. (ரு)

பிறகு அவரும் ஸமித்துக்களைக் கட்டிக்கொண்டு மனதில் மிகவும் சந்தோஷமடைந்தவரா யிருக்கும்பொழுதே அதிசீக்கிரத்தில் அறுபட்டவிரல் முன்னிருந்ததுபோலவே ஆகிவிட்டது. (௬)

ரிஷியின் விரலறுபட்டதும் அது சாம்பற்பொடியாய்க் காற்றில் பறந்ததும், உடனே அது முன்போலானது மாகிய பெரிய வாச்சரியத்தை அந்த 'பத்திர வடம்' என்ற ஆலமரத்திலிருந்து பார்த்திருந்த கின்னரஸ்திரீயும் புமானும், தேவலோகம் சென்று காலையில் தேவேந்திர ஸபையில் வழக்கப்படி கானம் செய்யும் ஸமயம் தவறி கின்னரகானம் செய்வதைக் கேட்ட வாயிரங்கண்ணுன தேவராஜன், அக்கின்னரஸ்திரீபுருஷர்களை நோக்கி "எங்கிருந்து வருகிறீர்கள்? எம்மை இந்நேரம் ஏன் ஸேவிக்கவில்லை" என்று கூறக்கேட்ட அவர்கள், தேவராஜனே! நாங்கள் புண்ணியதீர்த்த ஸ்நாநம் செய்யப்போயிருந்தோம். (எ—௯)

அங்கு ஒரு ஆச்சரியம் காணப்பட்டது. என்று விநயத்துடன் கைகூப்பிச்சொல்லவும், தேவராஜன் பூவுலகில் ஆச்சரியங்களாகவும் ஆச்சரியத்தில் ஆச்சரியங்களாகவும் நான் அநேகங்கள் பார்த்திருக்கிறேன். அதைக் காட்டிலும் என்னஅதிக ஆச்சரியம் இருக்கிறது. ஆகிலும் நீங்கள் கண்டவாச்சரியத்தைச் சொல்லுங்கள் என்று தேவராஜன் சொல்ல, அந்த கின்னரர்கள் "இமயமலையின் வடபுறம் தாழ்வரையில் புஷ்பபத்திரா நதிக்கரையில் சித்திரசிலைக்கு அருகிலிருக்கும் பத்திரவடமென்ற ஆலமரத்தடியில் வஸிக்கும் ஸத்தியதவர் என்ற ரிஷி, ஸமித்துக்களை வெட்டிக்கட்டும்போது அவருடைய விரலும் வெட்டுப்பட்டு ஊன், எலும்பு, மாம்ஸம், ரக்தம், தோல் இல்லாமல் சாம்பற்பொடியாய்க் காற்றில் பறந்ததையும் உடனே குறை நீங்கி முன்போல் அவ்விரல் செம்மையானதையும் பார்த்தோம்" என்று தெரிவிக்கக் கேட்டு தேவராஜன் தனக்குத்தம்பியாய் உபேந்திரனுக அவதரித்திருக்கும் விஷ்ணுவினிடம் தெரிவித்து அவரும் தானுமாய் கின்னரர்களால் சொல்லப்பட்டதையறியக் கருதி இந்திரன் வேடனுகவும் உபேந்திரன் பன்றியாகவும் உருமாறினர். (௧௦—௧௩)

உபேந்திரன் பாணத்தால் அடிபட்டமார்புடைய வராகரூபத்தோடு ரிஷியின் முன்னுக ஓடிவந்தார். வேடனுன இந்திரனும் அதையே பின்சென்று வந்து நின்று சொல்லுகிறுன். (௧௪)

ஓ ரிஷீசுவரரே! நான் எனது மனைவியோடும் பசியால் வருந்தின சிறு பிள்ளைகளோடும் ஆஹாரத்திற்காக இப்பன்றி கிடைத்ததே என்று இப்பொழுது ஆனந்தமடைந்தேன். (௧௫)

நான், என் மனைவி, சிறு குழந்தைகள், ஆகிய எல்லாரோடும் இப்பன்றியைப் பின் தொடர்ந்தோடி வந்து அதனாலுண்டான சிரமத்தாலும் பசிதாகங்களாலும் உயிர் நிலைப்பதரிதான தசையையடைந்திருக்கிறோம். (கசு)

அப்பன்றியின் அடிச்சுவடு தமது ஆசிரமத்திற்கு வெளியில் காணப்படவில்லை. ஆகையால் அப்பன்றி தமது ஆசிரமத்திற்குள்ளாகவே இருக்கிறது. அதைத் தாமே இப்பொழுதே காட்டாவிடில் இக்குடும்பமுழுவதும் பசியினால் வருந்தி இறந்துவிடும். தபோநிதியே! என்று இவ்விதம் வேடனான தேவராஜன் சொல்லுமளவில் முனிவர் தம்மனதில் "நான் இப் பன்றியைக் கண்டதாகச்சொல்லலாமா? காணாததாகப் பிழை சொல்லலாமா? கண்டதாகச் சொன்னால் இப்பன்றி உயிரிழக்கும், காணாததாகப் பிழை சொன்னால் இக்குடும்ப முழுமையும் பசியினால் உயிரிழக்கும் என்று யோஜித்து மிகவும் வருத்தப்பட்டவராகி அப்பொழுது வேடனை நோக்கிச் சொல்லுகிறார். (கஎ—உ0)

ஓ வேடனே! உலகத்தில் பார்ப்பதற்காகக் கண்களும், சொல்லுவதற்காக நாவும் எற்பட்டிருக்கிறது, ஆனாலும் சொல்லுகிறவன் யார்? காண்கிறவன் யார்? கேட்கிறவன் யார்? நீ யார்? யானார்? (உக)

இவைகளையெல்லாம் நீயே நன்றாய் அறிந்துகொள் என்று தர்மலோபம் வாராமல் ஸாமர்த்தியமாய்ச் சொன்னபொழுது, அந்த இந்திரன் உபேந்திரன் இருவர்களும் இவருடைய தர்மத்திற்கு மகிழ்ந்து, தாங்கள் இன்னாரென்று பிரத்தியக்ஷமாகக் காட்ட அம்முனிவர் இருவரையும் நோக்கிச் சொல்லுகிறார். (உஉ)

ஓ ஜகதீசர்களே! இவ்வுலகில் மிகவும் பூஜிக்கத்தக்க தாங்களிருவரும் நானிருந்தவிடம் தேடிவா நானும் கண்ணாற்பார்ப்பதே எனக்கு மிக்கவரம். தேவர்களுக்குத் தலைவர்களாகிய தாங்களிருவரும் எப்பொழுது என்னை இங்குளனாகக் கொஞ்சமறிந்தீர்கள்? என்று இவ்விதம் முனிவர் சொன்ன மொழியைக்கேட்டு இருவரும் இனிதாக உரைக்கிறார்கள். (உ௩)

ஓ முனிவரே! கின்னரன் ஒருவன் இவ்விடத்தில் நடந்த விஷயத்தைத் தெரிவித்தான். அது தமது மகிமையே. தம் விரல் அறுபட்டதும் உடனே அது முன்போலானதுமான ஆச்சரியம் ஒருவிடத்திலும் பார்க்கப்படாததாய்க் கண்டு அவன் கதையாகச் சொன்னதால், அத்தகைய தவத்தின் மகிமை யுடையராயிருக்கும் தம்மைக் காணக்கருதி ஆச்சரியப்பட்டவர்களாய் இங்கு வந்தோம். (உசு)

நாங்களிருவரும் பிரீதியினால் தம்முடைய இஷ்டத்தைத் தர உத்ஸாஹத்தோடிருக்கிறோம். என்றார்கள். (உசு இ)

பிறகு அம்முனிவர், தனக்குக்கிடைத்த தர்சனத்தால் ஆச்சரியப்பட்டு, எங்கும்நிறைந்து எல்லோருக்கும் மேலாய் ஜகத்பதியாக விளங்கும் விஷ்ணுவை தலையால் வணங்கியும் எழுந்து அடிக்கடி நமஸ்கரித்தும், தனது இருகைகளையும் கூப்பித் தன்தலையில் வைத்துக்கொண்டு ஆனந்தக் கண்ணீருடன் தழுதழுத்தச் சொல்லால் துதி செய்கிறார். (உஅ இ)

செல்வம், ஒளி, மகிமை, வீரியம், முயற்சி, விரத்தி ஆகிய இவைகளோடு கூடியும், எங்கும் நிறைந்தும், அடியாரிட மன்புள்ளவராயும், ஜகத்காரண வஸ்துவென்று தோற்றும்படியாக அலர்ந்த செந்தாமரைப் புஷ்பம்போன்ற திருக்கண்களையுடையராயும், சங்கு சக்காகம் முதலிய திவ்வியாயுதங்களைத் தரித்துமிருக்கும் தமக்கு நமஸ்காரம். (உகூ இ)

எல்லா உலகங்களுக்கும் நாதனும், கருடனைத் துவஜமாகவுடையராயும், பெரிய பிராட்டியாருக்கு நாதனும், ஆத்மவஸ்துவுக்கும் உள்ளிருந்து நடத்தும் ஆத்மாவாகியும் விளங்கும் தம்மை நமஸ்கரிக்கிறேன். (௩0 இ)

தேவரீரை, ஞானகுணனும், எல்லாவற்றிலும் சிறந்ததும், எப்பொழுதும் நிலைநின்றதும், முடிவற்றதும், எல்லாப் பொருள்களுக்கும் காரணமானதும், அநேகவித சாஸ்திரங்களால் தேடப்படுவதும், தன்னுடைய ஸங்கல்ப ஞானத்தாலே ஸகல பிரபஞ்சங்களை உண்டாக்குகிறதும், எப்பொழுதும் ஒரே ரூபமாக விருக்கிறதுமான பிரம்ம வஸ்துவாகப் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். (௩க இ)

இந்தப் பிரபஞ்சம், தம்மிடமிருந்து உண்டாகியும், அவ்விதம் உண்டானவைகள் தம்மால் காக்கப்பட்டும், மறுபடி தம்மிடத்திலேயே சுகமாயிருப்பதால் தாமே பரப்பிர்மவஸ்து. அத்தகைய தமக்கு வந்தனம். (௩உ இ)

தம்மை, பிராணிகளின் இருதயத்துள் நிற்கும் பரமாத்மாவாகவும், ஆனந்தவெள்ளம் நிறைந்தவனாகவும், சித் அசித் ஸ்வரூபனாகவும், ஸ்ரீ வைகுண்டமென்ற பரமாகாசத்தில் பரிசுத்தமாக விளங்கி, பிறப்பற்று எங்கும் நிறைந்தவனாகவுமுள்ள விஷ்ணுவென்றறிந்தேன். (௩௩ இ)

எனது ஸகல பாவங்களும் விலகி சுகிருதங்களை அடைவதற்கு மேலோர்க்கும் மேலான தம்மை யான் தலையால் வணங்குகிறேன்.

தம்மை வணங்கினவனுக்குத் தாம் பிரஸன்னராகில் எதுதான் கிடைப்பதரிது ? (ருச இ)

ஸகல வஸ்துக்களிலும் நிறைந்து, வேதச் சுருக்கமான பிரண வத்தின் பொருளாய், ஜயசீலனுகி, அடியார்களின் ஆர்த்தியைப் போக்கி, எல்லாவற்றையும் அடக்கி ஆண்டு, (பிரமனுக்குப் பிறப் பிடமான) கமலத்தை நாபியிலுடையனுய் நீலமேனியோடு, குறை வற்று எங்கும் உட்புகுந்து விளங்கும் ஸ்வாமி! என்னிடத்தில் எப் பொழுதும் பிரஸன்னராகவேயிருக்கப் பிரார்த்திக்கிறேன். (ருரு இ)

சூரிய மண்டலத்தால் தாமரைப் பூப்போலவும், சந்திர மண் டலத்தால் சகோர பக்ஷிபோலவும், மேகக்கூட்டத்தால் மயில்போ லவும், தமது திருமுக மண்டலத்தால் நான் மிகவும் ஆனந்திக் கிறேன். (ருசு இ)

பிறப்பிலியான தேவரீரை வேதங்கள் பலவாகியும் ஸ்தோத்தி ரம்செய்யமுடியாதொழிந்தன. அப்படியிருக்க அக்ஞ்யனுனவென் போன்றவர்களின் வாக்குகளால் துதிசெய்ய முடியாதென்பது சொல்லவேண்டுமோ ? ஆகையால் தாமே கிருபைசெய்ய வேண்டும். (ருஎ இ)

பார்த்தவர்கள் மனதைக் கவரத்தக்கதும், மேற்பட்டதும் சம மானதுமான வேறொரு வஸ்துவும் இல்லாததும், நான் இப்பொ ழுது கண்டனுபவிக்கின்றதுமான தம்முடைய இந்த ரூபமானது எனக்கு எப்பொழுதும் தோற்றவேண்டும். (ருஅ இ)

என்று பிரார்த்தித்த ரிஷியை நோக்கிப் பகவான் அருளிச் செய்கிருர். ஓ முனீந்திரரே! உம்முடைய தவத்தின் மகிமையால் நான் பிரஸன்னனுனேன். இந்த ஸ்தலமானது எப்பொழுதும் வஸிப்பதற்குத் தகுதியுள்ளதாய் எனக்குத் தோற்றவில்லை. (ருகூ இ)

ஆகையால் உனக்கும் எனக்கும் பிரியத்தைச் செய்யும் விஷ யம் ஒன்று சொல்லவேண்டியதுண்டு. (சo)

அநேக புண்ணிய க்ஷேத்திரங்களில் பெருந்தவம் செய்யுமவர் களுக்கு அநேக நூருயிரம் யுகங்களின் மேல்தான் பலம் ஏற்பட வேண்டும். (சக)

இப்பூமியில் சீக்கிரத்தில் தவத்தின்பயனைத் தரக்கூடிய க்ஷேத் திரம் ஒன்றே இருக்கிறது. எதில் ஆதிசேஷன், கருடன், சந்திரன் இவர்கள் முன்னமே தவம்செய்து ஸித்தியடைந்திருக்கிருர்களோ அந்த ஸத்திய க்ஷேத்திரத்தில் ஸத்தியகிரியில் நான் உம்மோடுகூட வே ஸதா வாஸம்செய்கிறேன். மாமுனிவரே! அந்த ஸத்தியக்ஷேத் திரத்திற்குப் புறப்பட இந்தக்ஷணமே எழுந்திரும். (சரு)

இங்கிருக்கும் உம்மை தேவேந்திரனுடைய விமானத்தால் அழைத்துப்போகச் செய்கிறேன். என்ற பகவானை நோக்கி ஸத்தியதவர் கூறுகிறார். (சரு௩)

நித்திய ஸூரிகளுக்குத் தலைவனான ஸ்வாமி! நான் மிகவும் நன்மை பெற்றேன். தாம் நியமித்தபடி செய்ய ஸித்தனாகவே இருக்கிறேன். ஆனால் என்னுடைய தவம் பெருகும்படி செய்தது இந்த "பத்திரவடம்" என்ற ஆலமரம். இந்த "சித்திரசிலை" என்ற பரிசுத்தமான பாறையும் எனக்கு ஸத்துவகுணத்தைத் தந்தது. "புஷ்பபத்திரை" என்ற இந்நதியும் ஸகல பாவங்களையும் போக்கியது. (சரு௩)

ஆகையால் எனக்கு இந்த மூன்றும் தந்தை, தாய், தோழி போலிருக்கின்றன. வெகு காலமாய் நான் இவைகளோடு பழகினபடியால் இம்மூன்றையும் விடுவதற்கு மனம் துணியவில்லை. (சசு௩)

என்ற ஸத்தியதவரைக் குறித்து பகவான் சொல்லுகிறார். ஓ சிறந்த முனிவரே! உம்முடைய நன்றியறிவு நன்றாயிருக்கிறது. ஏனெனில், அசேதனங்களான மரம், கல், ஆறு இவைகளின் சினேகத்தை விடாது நிற்கின்றீர். (சஎ௩)

அவைகளில் இவ்வாலமரத்தையும் சித்திர சிலையையும் தேவராஜனுடைய "ஐராவதம்" என்ற யானையானது வருத்தமின்றித் தன் தலையாலும் துதிக்கையாலும் ஸத்திய க்ஷேத்திரத்திற்குக் கொண்டுவந்துவிடும். (சஅ௩)

இந்த "புஷ்பபத்திரை" என்ற நதியும் தன் மூர்த்தியோடு உம்முடைய ஸமீபத்தில் என் ஆக்ஞையயின்படி ஸத்திய க்ஷேத்திரத்தில் எப்பொழுதும் நிற்கும். (சகூ௩)

என்று பக்தவத்ஸலரான பகவான் உத்தரவு செய்து கருடன் மேலேறிக்கொண்டு, ஐம்புலன்களையும் அடக்கினவரான ஸத்தியதவராலும் தேவேந்திரனாலும் ஸேவிக்கப்பட்டவராகி, சீக்கிரத்தில் தவப்பயனைத் தரும் ஸத்திய க்ஷேத்திரம் வந்துசேர்ந்தார். (ருக)

ஐராவத யானையும் பகவானுத்தரவின்படி அடியில் கட்டியிருக்கும் குறடுடன் ஆலமரத்தையும், சிலையையும் தன் கையாலும் மஸ்தகத்தாலும் தாங்கி, தான் தரித்திருக்கும் புஷ்பமாலையிலிருந்து பெருகும் தேன்களாகிய நீரைவார்த்து அம்மரம் வாடவிடாமல் செய்துகொண்டு அசையாமல் மடக்கிக்கட்டாத விரிந்த கிளைகளுடன் எடுத்துக்கொண்டு ஸத்தியகிரியில் கொண்டுவந்து சேர்த்தது. (ருரு)

இவ்விதம் சாக்ஷுஷமனுவின் காலத்தில் இரண்டு சதுர்யுகத்தின் மேல் வைகாசிமாதம் சுக்கில பக்ஷம் பஞ்சமி திதி ஞாயிற்றுக்கிழமை, பூசநக்ஷத்திரம், வித்தநாமயோகம், பாலவகரணம், ஸிம்ம லக்கினம் கூடின சுபதினத்தில் ஸர்வஜகத்துக்கும் நாதனான பகவான் ஸ்ரீ ஸத்தியக்ஷேத்திரம் வந்தடைந்தார். (ருரு)

பிறகு தேவேந்திரனுந் தன் விமானத்திலிருந்து ஸ்த்தியமுனிவரை இறக்கிவிட்டு ஐராவதத்திலிருந்து ஆலமரத்தையும் சித்திர சிலையையும் இறக்கி ஸத்திய புஷ்கரிணியின் ரம்மியமான கரையில் ஸ்தாபித்தான். (ருசுஇ)

பகவான் ஸத்திய மகரிஷியை நோக்கி, முனிசிரோமணியே! எனக்கு மிகவும் பிரியமாயுள்ளதும், உம்மிடம் முன் சொல்லப்பட்டதுமான ஸத்திய க்ஷேத்திரமென்பதிதுவே. இதில் நான் எப்பொழுதும் வஸிக்கிறேன். (ருஎஇ)

நீரும் இவ்வாலமரத்தின்கீழ் என்னையே ஆராதித்துக்கொண்டு தவம் செய்யும். ஆனால் தாம் அர்ச்சிக்கத்தக்க என்னுடைய பிரகிருதி ஸம்பந்த மற்ற இந்த திவ்விய சரீரமானது ஸாமான்ய மனிதர்களால் தர்சிக்கத்தக்கதல்ல. (ருஅஇ)

ஆகையால் எல்லோரும் தர்சிக்கத்தக்கபடி அர்ச்சாவிக்கிரஹத்தோடு நித்தியவாஸம் செய்கிறேன். உமக்கு மாத்திரம் இந்த திவ்யரூபமாகவே எப்பொழுதும் தர்சனம் கொடுக்கிறேன். என்னுடைய இந்த ரூபம் போலவே இம் முகூர்த்தத்திலேயே தெய்வத்தச்சனான விசுவகர்மாவும் சில்பசாஸ்திரத்தில் சொல்லிய படி மூர்த்தியையும், விமானத்தையும் இந்த சித்திரசிலையால் அமைத்து வைக்கச்செய்யும். (சு0இ)

என்று லக்ஷ்மீகாந்தனான பகவான் நியமிக்கும்போது விசுவகர்மாவும் வந்து நமஸ்கரித்து கைகூப்பி உத்திரவின்படி சித்திர சிலையை மூர்த்திக்கும் விமானத்திற்கும் தனித்தனி வகுத்து, அதி ஸௌந்தரமாயும், நெருங்கினவர்கள் மனதைக் கவரக்கூடியதும், கண்டவர்கள் கண்கள் களிக்கச் செய்வதுமான அர்ச்சாவிக்கிரகத்தையும் விமானத்தையும் அந்த சுபமுகூர்த்தத்திலேயே அமைத்தான். (சுஉஇ)

சில்பப்படி நன்கமைந்த லக்ஷணத்தோடு கூடியதும் தென் புறம் வாசலுடையதுமான "ஸோமச்சந்தம்" என்று பெயருள்ள அவ்விமானத்தில் பகவானுடைய விக்கிரகத்தை நிலைநிறுத்தி, பரிசுத்தமான அந்த கர்ப்பகிருகத்தில் பகவத் பிம்பத்தின் திருமார்பில் வலப்புரத்தில் லக்ஷ்மீதேவியையும் பிம்பத்திற்கு வலது பக்கத்தில், தண்டகர், பிருகு, பிர்மா இவர்களையும் இடதுபக்கத்தில் கருடனையும் பூமிப்பிராட்டியையும், கர்ப்பகிரகத்தின் வெளிப்புறத்தின் வலதுபக்கத்தில் "மணிகன்" என்பவனையும் இடதுபக்கத்தில் ஸந்தியாதேவியையும், இரண்டாவது ஆவரணத்தில் "துருகிணன், நந்தகன்" என்பவர்களையும் துவாதசாதித்தர்களையும், நவக்கிரகங்களையும் விமானத்தில் கிம்புருஷர்கள் முதலிய வர்களையும், யக்ஷர்கள் முதலியவர்களையும் அமைத்து வைத்தான். (௬௭)

மூன்றுவது துவாரதேசத்தின் வலதுபக்கத்தில் "சக்ரசூளன்" என்பவனையும், இடது பக்கத்தில் "சங்கசூளன்" என்பவனையும், எதிரில் கருடனையும், விமானத்தைச் சுற்றிலும் இந்திரன் முதலிய திக்பாலகரையும், ரோகிணீ தேவதையையும், ஸப்த மாதாக்களையும், அஷ்டவஸுக்களையும், பலிரக்ஷகன், புஷ்யன் தக்ஷகன், ஸுப்பிரமணியன், ஸரஸ்வதி என்னும் இவர்களையும் பஞ்சபூதங்களையும், துர்க்காதேவியையும், விஷ்ணு பூதத்தையும், ஹரித்துவஜத்தையும் தேவாலய லக்ஷணப்படிக்குள்ளதாயிருக்கும்படி விசுவகர்மாவான தேவத்தச்சன் நன்றாய்த் தெரியும்படியாக அமைத்து வைத்தான். (௭௦இ)

அப்பொழுது பகவான் பிரதிஷ்டை செய்ய பிர்மாவையும் விருஷபத்துவஜரையும் (பரமசிவனையும்) நினைத்தார். (௭௧)

நினைத்தவுடன் பிர்மா எல்லா ரிஷிக்கூட்டங்களுடனும் வந்து சேர்ந்து, விசுவகர்மாவினுல் செய்யப்பட்ட அந்த விமானத்தையும் அதற்குள் அர்ச்சா விக்கிரஹத்தையும், ஸாக்ஷாத் ரூபத்தோடு நிற்கும் ஸ்ரீ பகவானையும் நமஸ்கரித்து, மந்திரம் பெருமைதங்கிய அஷ்டாக்ஷரமாகவும், ஆராதனக் கிரமம் வைகாநஸமாகவும் ஏற்படுத்தி, வேதமுறையோடு ஸம்புரோக்ஷணம் முதலியவைகளைச் செய்து, அந்த அர்ச்சாவிக்கிரகத்தின் அழகைக்கண்டு மிகவும் ஆச்சரியம் அடைந்து நின்றூர். (௭௨)

இவ்விதம் பிரதிஷ்டைசெய்த சுபமுகூர்த்தத்தில் ஸ்ரீபகவான் ஸத்திய முனிவரை அமிருத வெள்ளம்போன்ற கடாக்ஷங்களால் குளிரநோக்கி நியமித்தருளினர். (௭௩)

ஓ முனிவரே! மிகுந்த புண்ணியத்தைத் தரக்கூடிய இந்த ஸத்திய க்ஷேத்ரத்தில் சித்திர சிலையால் அமைக்கப்பட்ட இந்த அர்ச்சா பிம்பத்தில் என்னை, வேறிடத்தில் செல்லாத மனத்துடன் பக்தியோடு ஆராதனம் செய்துகொண்டிரும். (எசு)

புதனுடைய புத்திரனும் "புரூரவன்" என்ற அரசனுமான எனது பக்தன் எப்பொழுது இவ்விடத்தில் தமது ஸமீபம் வந்து சேருவனோ அப்பொழுதே நீர் நல்ல ஸித்தியையடைவீர். (எஎ)

துர்வாஸரிஷியின் சாபத்தால் பாம்பினுருக்கொண்டவனும், என் ஸேவகனுமான "தக்ஷகன்" என்பவன் உம்முடைய தர்சனமாத்திரத்திலேயே ஸர்ப்பரூபம் விலகி முன் ரூபத்தை அடைவன். (எஅ)

அக்காலத்தில் நான் இந்த ரூபத்தோடு இவ்விடத்தில் வந்து நீர் இதுகாலம் என் ஆராதனமாகிய நல்விரதத்தைச் செய்தவராகையால் உமக்கு திருப்பாற்கடலில் என்னுடன் வஸிப்பதாகிய "ஸாமீப்ய" முக்தியைத் தருவேன். (எகூ)

உம்முடைய பெயர் இங்கு ஓங்கி வழங்குவதற்காக, உம்மால் இங்கு வைக்கப்பட்ட இவ்வாலமரம், கிருதயுகத்தில் "பத்திரவட"மாகவும், திரேதாயுகத்தில் "அசுவத்த"மாகவும், துவாபரயுகத்தில் "புத்திரதீப"மாகவும், கலியுகத்தில் "பநஸ"மாகவும் பெயர் வழங்கப்பெற்று நிற்கும். (அ0)

என்று சொல்லிவிட்டு எங்கும் நிறைந்த பகவான் அவ்விடத்திலேயே மறைந்தார். அப்பொழுது அங்கு வந்திருந்த பிர்மாவும், எல்லாத் தேவர்களும், ரிஷிகளும், அவரவர்கள் ஸ்தானமடைந்தார்கள். (அக)

பிறகு ஸத்தியதவரிஷியும் முன் இமயமலையில் செய்த தவத்தின் பலமாக ஸ்ரீ பகவான் அங்கு தர்சனம் கொடுத்தும், இங்கு ஸத்திய க்ஷேத்திரத்திலும் சித்திர சிலாவிக்கிரக ரூபியான ஸத்தியகிரி நாதனை ஆராதனம் செய்துகொண்டு மறுபடியும் தவம் செய்ய ஆரம்பித்தார். (அஉ)

அக்காலம் அம்முனிவர் ஸோமச்சந்த விமானத்துள் எல்லோரும் தர்சிக்கத்தக்க ஸ்தூலபமூர்த்தியாய், ஸுந்தராகிருதியான பகவானையே பரமாநந்தாமிருத வெள்ளம் பெருகும் முகத்தையுடையராய் ஸேவித்துவந்தார். (அரு)

இவ்விதம் ஸத்திய மகரிஷியானவர் இமயமலையில் தவம் செய்து பகவானுடைய தர்சனம் பெற்று, அவருடைய நியமனப் படி பத்திரவடம், சித்திரசிலை, புஷ்பபத்திரா நதி இவைகளுடன் தேவராஜன் விமானமேறி, ஸத்தியகிரியை அடைந்து, பக்தஜனங் களின் கஷ்டத்தை நீக்கி இஷ்டத்தைத் தரும் பகவானை, மிக்க ஆனந்தமுடையராய் ஸேவித்துவந்தார். (அச)

என்று பிர்மாண்ட புராணத்தில்
மகேசுவரநாரத ஸம்வாதத்தில்
ஸத்திய க்ஷேத்திர மகிமையில்
ஸத்தியதவரின் கதை என்ற
ஐந்தாவது அத்தியாயம்
பூர்த்தி பெற்றது.

---

ஸ்ரீ ஸத்தியமூர்த்தயே நம:

## ஆறுவது அத்தியாயம்.



ஸ்ரீ நாரதமுனிவர் பரமேசனை நோக்கி சம்போ! ஸத்தியதவர் என்ற முனிவரின் சரிதத்தைத் தம்முகமாய்க் கேட்டுணர்ந்தேன். புரூரவ சக்ரவர்த்தியின் கதையை உள்ளபடி கூறியருளவேண்டும் என்று கேட்க மகேசுவரன் கூறுகிறார். (க)

ஓ நாரதரே! அவன் தன் நாமத்தைப் பிறர் உச்சரித்தாலே புண்ணியம் ஏற்படத்தக்க மகிமையுடையவனும், அதிபராக்கிரம சாலியாயும், மற்றரசர்களுக்கெல்லாம் அரசனாய் ''சக்கரவர்த்தி'' என்ற பெயர் பெற்றவனும் இந்தப் பூலோகம் முழுவதிலுமுள்ள ஸம்பத்தை அனுபவித்து வந்தான். (உ)

அவனது ஸத்தியம், தர்மம், கீர்த்தி இவைகளை யான் எவ்வி தம் எடுத்துரைப்பேன். அவனுடைய பெயரைச் சொன்னாலே உரைப்பவர்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்ற புரு ஷார்த்தங்கள் உண்டாகும். (௩)




எல்லாஜனங்களின் நன்மை தீமைகளைத் தோற்றுவிப்பதான காரியத்தை வஹித்தும், சுத்தஸத்வ குணத்தையுடையனுய்க் கொண்டு எங்கும் வஸித்து விளங்கும் விஷ்ணுவுக்கு எப்பொழுதும் மனத்தாலே நடத்தக்கூடிய (மாநஸிக) பூசை செய்துவந்தான். (௪)

அவனது பூசையின் முறையைத் தெரிவிக்கிறேன். நன்ருய் நீரறிந்து கொள்ளும். அவ்விதம் பூஜைசெய்ய தேவர்களாலும் ரிஷிகளாலும் மனதை ஒருமைப்படுத்த முடியாது. மற்றவர்கள் செய்ய முடியாதென்பது சொல்லவேண்டுவதில்லை. (௫)

அந்த மாநஸிக பூஜைக்கு இப்புவனங்களை யெல்லாம் தாங்கி நிற்கும் ஆதிகூர்மமே பாத்திரங்கள் வைக்கும் மேடை. அர்க்கிய பாத்தியாதிகளுக்குப் பாத்திரங்கள்—ஆதிசேஷனுடைய படமெடுத்த சிரங்கள். பசுவின் பால்—ஸமுத்திரங்கள். நிவேதனம் செய்ய அன்னம்—பதினன்கு லோகங்களும் அவைகளிலுள்ள பயிர்கள் மூலிகைகள் விருக்ஷங்களுமே. புஷ்பம்—நக்ஷத்திரக் கூட்டங்கள். (௭)

சந்தனம்—சந்திரன். ஆபரணங்கள்—பன்னிரண்டு ஆதித்தியர்கள். வஸ்திரம்—கிழக்கு முதலிய நான்கு திக்குகளே. 'பாநீயம்' என்ற அருந்தத்தக்க தீர்த்தம் — கங்கை முதலிய புண்ணிய நதிகள். தூபம்—மேகங்கள். தீபம்—ஸூர்யன் முதலிய நவக்கிரகங்கள். (அ)

"பாத்தியம், அர்க்கியம், ஆசமனீயம்" என்பவைகள் "மாநஸஸரஸ்" முதலிய புண்ணிய ஸரஸுகள். நிவேதனத்திற்கான அப்பங்கள்—மந்தரம் முதலிய குலபர்வதங்கள். பானகத்திற்குசேர்க்க வெல்லக்கட்டிகள் சிறுமலைகள். (௯)

இவ்விதமான வஸ்துக்களை பூஜாத்திரவியங்களாகக் கொண்டு மனத்தாலேயே பகவானுக்குப் பிரதிதினமும் ஆராதனத்தை அப்புரூரவச் சக்கரவர்த்தி செய்துவந்தான். (௧௦)

ஓ முனிசிரோமணி! இவ்விதம் அவன் மனத்தாலே பூஜை செய்யும்போது ஒருநாள் ஒரு பெரிய ஆச்சரியம் நடந்தது. (௧௧)

அதாவது—பழவர்க்கங்களோடு மதுர ரஸவர்க்கங்களைக் கூட்டிய மதுபர்க்கத்தை மனத்தாலே அமைத்து ஸ்வாமிக்கு நிவேதனம் செய்வதாக எண்ணி அம்மதுபர்க்கம் சேர்க்க சிறு மலைகளாகிய வெல்லக்கட்டிகளில் ஒன்று தவறி, ஆவின்பாலாய் அமைத்த ஸமுத்திரத்தில் அஜாக்கிரதையால் விழுந்ததாகவும் அதனுலுண் (௧௨)

டான துளிகளால் பகவானுடைய விசாலமான திருமார்பு நனைக்கப்பட்டதாகவும் எண்ணி, அவன் பகவானுக்கு அபசாரப்பட்டோமென்று நடுங்கிய மனமுடையனுய் தன் வஸ்திரத்தால் சீக்கிரமாய் பகவானுடைய திருமார்பைத் துடைத்தான். (௧௩)

இவ்விதம் பரிவுடன் செய்ததைப் பகவான் உணர்ந்து திருப் பாற்கடலில் சிரித்தார். இதைக்கண்டு காரணமறியாது, லக்ஷ்மீ தேவியானவள் பகவானிடம் சிரித்தகாரணம் தெரிவிக்கவேண்டு மென்று வேண்டிக்கொண்டாள். (௧௪)

பகவானும் புரூரவன் செய்த மானஸிக பூஜையையும், அவன் மதுபர்க்கம் செய்யும்பொழுது வெல்லமலே தவறிப் பாலில் விழுந் தமையால் உண்டான பால் திவலைகளால் நனைக்கப்பட்டதாக நினைத்து திருமார்பை வஸ்திரத்தால் துடைத்த வியப்பையும், அவ னுக்குத் தன்னிடமிருக்கும் அன்பையும், தனக்கு அவனிடமிருக் கும் அன்பையும், அதன்மூலம் தான் சிரித்ததையும் அமிருதம் பொழியும் இனிய வாக்கினல் பிராட்டியிடம் தெரிவித்தார். (௧௫)

அவளும் மகா ஆச்சரியமான பூஜையைக்கேட்டு மகிழ்ந்து, அரசனிடத்தில் கருணையுடையளாய் தனது நாயகனை பகவானி டம் அலர்மேல் மங்கைப்பிராட்டி கூறுகின்றாள். (௧௬)

ஸ்வாமி! இப்புரூரவனே நல்லறிவுடையவன் பாகவதர்களுக் குள் சிறந்தவன். சந்தோஷமடைந்த தம்மால் அனுக்கிரகம் செய் யத்தக்கவன். (௧௭)

உலகத்தாருள் அவனே பாக்கியம் பெற்றவன், அவனே தன் பெயரைச் சொல்லுமவர்களுக்கும் புண்ணியத்தைத் தரக்கூடிய வன். இம்மூவுலகங்களையும் தேவரீருடைய பூஜைக்கு வேண்டிய வஸ்துக்களாகத் தம்மிடம் அர்ப்பணம் செய்தவன். (௧௮)

என்று சிரீதேவியால் உரைக்கப்பட்ட நித்திய ஸூரிகளுக்கதி பதியான பகவான் அவ்வரசனுக்கு அனுக்கிரகம் செய்யக் கருதி, கருடன் மேலேறி, தம்பரிஜனங்களுடன் ஸத்திய க்ஷேத்திரத்திற்கு எழுந்தருளினர். (௧௯)

வந்தவுடன் ஸகல ஜகத்துக்கும் நாதனை ஸர்வேசுவரன் தன் னுடைய உயர்ந்த வடிவை மறைத்து, விளையாட்டாகப் பன்றியின் வடிவுகொண்டு கர்ஜித்துப் புறப்பட்டார். பகவான் வராஹரூபம் கொள்ள பின்வந்த 'விஷ்வக்ஸேனர்' என்ற ஸேனைத்தலைவர் முத லிய எல்லோரும் அந்த ரூபம் கொண்டவர்களாய், தம் ஸ்வாமி யான பகவானைப் பின்பற்றிச் சென்றார்கள். (௨௰)

வைகைக்கு வடக்குப்பக்கமாகவும் வெள்ளாற்றிற்குத் தெற்குப் பக்கமாகவும் உள்ளனவும் மிகவும் செழித்தனவுமான கிராமங்களை யடைந்து, பார்த்தவர்களுக்குப் பயமுண்டாகும் ரூபமுடையன வாய், அங்குள்ள செந்நெற்களால் பூர்ணமான விசாலமான வயல்

களையும், கமுகு, புன்னை, முல்லை முதலிய கொடி, கரும்பு இவை களால் நிறைந்த தோட்டங்களையும், தாமரை, அல்லி, செங்கழுநீர் இவைகளால் பூர்ணமான தடாகங்களையும் இப்பன்றிகள் அழித் தன. அக்காலம் கிராமங்களிலுள்ள ஜனங்களெல்லாம் இந்த வரா (௨௪)
ஹங்களின் உபத்திரவத்தால் கலங்கி, அரசன்வஸிக்கும் ராஜதானி யான மதுரை நகரடைந்து அரண்மனைவாசலில் நின்று முறையிடு கிறார்கள். (௨௫)

ஓ மகாராஜ! இதற்குமுன் ஒருவராலும் காணப்படாத உருவ த்தோடுகூடி பலத்தால் திமிர்கொண்டு திரியும், பன்றிகளால் நாங் கள் பயிர்செய்த வயல்கள் கொஞ்சமும் பயிர் இல்லாதவைகளாக அழிக்கப்பட்டன. என்று கூக்குரலிட்டதைக் கேட்ட புரூரவ (௨௬)
ராஜன், அந்த க்ஷணத்திலேயே வேடர்களைக் கூப்பிட்டு அப்பன்றி களின் கூட்டங்களை ஒன்றும் விடாமல் கொன்றுவிடுங்கள் என்று உத்தரவு செய்தான். இவ்விதம் அரசனால் உத்தரவு செய்யப்பட்ட (௨௭)
வேடர்கள் வலைகள், ஈட்டிகள், கத்திகள் முதலிய கருவிகளுடன் வேட்டை நாய்களையும் கொண்டு ஒரே கூட்டமாய் நிற்கும் அப் பன்றிகளை வளைத்துக்கொண்டார்கள். (௨௮)

அப்பொழுது வராஹரூபியான "விஷ்வக்ஸேனர்" என்ற ஸேனைத்தலைவர் அவைகளுக்கெல்லாம் முன்னின்று வலைகளையும் கயிறுகள் முதலியனவற்றையும் அறுத்து அவ்வேடக் கூட்டத்தைத் துணித்தார். அக்காலம் அவ்வேடர்களில் சிலர் காலொடிந்து (௨௯)
விழுந்தனர். சிலர் கையறுபட்டார்கள். சிலர் நெஞ்சுபிளக்கப் பட்டார்கள். சிலர் மண்டையுடைந்தனர். சிலர் அடிபட்டு வாயால் (௩௦)
ரக்தத்தைக் கக்கினார்கள். சிலர் கழுத்தில் ஊனமடைந்தனர்கள். இவ்விதமாக வேடர்களின் கூட்டங்கள் எல்லாம் ஓர் பன்றியால் அடிக்கப்பட்டன. (௩௧)

இதைக்கண்ட குடிகளெல்லாம் நடுநடுங்கிய மனமுடையவர்க ளாய் வேகமாய் ஓடிச்சென்று தேவராஜனுக்கு நிகராக விளங்கும் புரூரவ சக்ரவர்த்தியிடம் வேடர்களின் நாசத்தை அறிவித்தார்கள் (௩௨)
இதைக் கேட்ட மகாராஜன் கோபங்கொண்டு அவ்வராஹங்களைக் கொல்ல, தானே செல்ல உத்தேசித்து, தன் சிறந்த மந்திரிகளை வரவழைத்து, பன்றி வேட்டையாகச் செல்ல நினைக்கிறேன். அது நன்மையைத் தருமா? தெரிவியுங்கள். (௩௩)

என்று கேட்க அந்த அரசனை நோக்கி மந்திரிகள் கூறுகிறார் கள். ஓ ராஜராஜனே! தாங்கள் அறிவிற் சிறந்தவராகப் பெயர் பெற்ற புதனுடைய புத்திரனாகையால் தங்கள் புத்திவிஷயத்தில்

நிகராக இவ்வுலகில் யாரிருக்கிறார்கள் ? ஆகிலும் தங்கள் உத்தரா வின்படி எங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறோம். உலகத்தில் மனிதனுக்கு ஏற்பட்ட ஏழுதுன்பங்களுக்குள் முதன்மையானது வேட்டையாடுதல். இதை யோஜித்துப் பார்க்கலாம். தவிரவும் (௩௪) ஓர் சிறு பன்றியினால் முரட்டுவேடர்கள் அநேகர் அடிக்கப்பட்டார் கள். அவைகளுக்குத் தலைவனான யூதபதி வாராஹம் கோபத்துடன் வந்தால் இவ்வுலகமெல்லாம் கோரைக் கிழங்குக்கு நிகராகும். (௩௫) ஆகையால் இதற்குமுன் இவ்விதத்துன்பம் காணப்படாததனால் தேவர்களுடையவோ, ராக்ஷஸர்களுடையவோ ஆக்ஞையயின்பேரில் இவ்வுபத்திரவம் ஏற்பட்டிருக்கிறது. முற்காலத்தில் அடியார்கள் (௩௬) துன்பத்தை நீக்கும் ஹரியானவர் வராஹரூபம் கொண்டு "ஹிரண் ணியாக்ஷன்" என்ற அஸுரனை வென்றார். ஆகையால் இவ்விஷ யங்களை யெல்லாம் யோஜித்து நடத்தவேண்டியது மகாராஜர் கடமை. (௩௭)

என்ற மந்திரிகளை நோக்கி மகாராஜர் ஓ மந்திரிகளே! உலகத் தைக்காக்கும் அரசனாகப் பிறந்த எவன்தான் ஜனங்களுக்கு இந்தத் துன்பத்தை நீக்காமல் பொறுத்திருப்பான்? அப்பன்றிகள் காட்டி லுள்ளவைகளானால் என்னால் ஜயிக்கமுடியும். நீங்கள் யோஜிக்கிற படி தெய்வப்பிறப்புள்ளவைகளானால் அவைகளை வணங்கிக் காரி யம் முடித்துக்கொள்ளுகிறேன். (௩௮)

என்று சொல்லிவிட்டுத் தானும் நன்றாய் யோஜித்து தன் புத்திரனான "கமலநயனன்" என்பவனுக்கு சக்கரவர்த்திப் பட்டா பிஷேகம் செய்து, வேடர்கள், மந்திரிகள், இவர்களையும் தேர், யானை, குதிரை, ஆள், ஆகிய நான்குவிதமான படைகளில் பாதி யையும் தன் புத்திரனுக்கு ஸாதகமாக வைத்துவிட்டு, மீதமான பாதிப்படைகளுடன் புரூரவச் சக்கரவர்த்தி வெளியே புறப்பட் டான். (௪0)

மதுரைக்கு வடக்கில் மூன்று யோஜனைக்கு அப்பால் வந்து அங்கிருக்கும் பன்றிக் கூட்டத்தைக்கண்டு அதின் அமைப்புக்கு ஆச்சரியமடைந்து புன்சிரிப்புடன் நின்று தன் ஸைனியங்களையும் வலைகளையும் சுற்றிலும் வளைத்துக்கொள்ளச் செய்து தானும் வில்லையெடுத்து ஞாணேற்றிட்டு அதிவேகமாய் அவ்வாராஹக் கூட் டங்களை எதிர்த்தான். ஸைன்யங்களும், வில்லு, தோமரம், வாள், கத்தி, சக்தி, இரும்புத்தடி, அரிவாள், ஈட்டி, சக்கரம், உலக்கை ஆகிய இவ்வாயுதங்களைக் கொண்டு எதிர்த்தன. (௪௩)

வராஹ ரூபத்தைக்கொண்ட விஷ்வக்ஸேனர் முதலிய புகவா

னுடைய தாஸகணங்கள் எல்லாரும் வலைபோல் சூழ்ந்து நிற்கும் ஸேனையோடு எதிர்த்து, மேல்விழுதலாலும், முகத்தால் அடித்த (௪௪) லாலும், வாயால் பிளத்தலாலும், காலால் அழுத்துதலாலும், சரீரத்தால் உரசுதலாலும் உபத்திரவமடைந்த அச்சேனை முழுவதும் புறங்காட்டி ஓடிவிட்டன. (௪௫)

இவ்விதம் தன் படைமுழுவதும் ஓடிவிட்டபடியால் கோபம் கொண்டு அப்புரூரவாராஜேந்திரனும் ஒருவனாகவே அப்பன்றிகளுக்குத் தலைவனைக்கிட்டி கடூரங்களான பாணங்களால் சரீரம் முழுவதும் நிறைத்தான். அந்த பாணங்களெல்லாம் அந்த வராஹத்தின் சரீரத்தில் புஷ்பங்கள்போல் விழுந்தன. அவ்வராஹங்களுக்குத் (௪௬) தலைவனான வராஹமும் புரூரவனுடைய ஸமீபத்தில் குதித்து வீழ்ந்து கர்ஜித்துக்கொண்டு முன்கால்களிரண்டினாலும் அவனுடைய இஷ்டமான வில்லைப்பிடித்து இழுத்தவது மிக ஆச்சரியமாகவிருந் (௪௭) தது. பிறகு அவ்வரசன் எவ்வளவோ பலவானாகவிருந்தும் அதை இழுத்துக்கொள்ள சக்தியற்றவனாய், கபடமான வராஹத்தால் இழுக்கப்பட்ட கோதண்டத்தை சீக்கிரம் கைவிட்டான். பிறகு (௪௮) அவ்வராஹம் தன் மூக்கினால் அந்த வில்லைப்பிடித்து இழுத்துக் கொண்டு கிழக்குத் திக்கில் சென்றது. அரசனும் கையில் வில்லை இழந்துவிட்டமையால் கத்தியை எடுத்துக்கொண்டு தலைமயிர்களை இறுக்கிக் கட்டிக்கொண்டு அதிவேகமாய்க் கால் நடையாகவே அதன்பின் ஓடினான். அதிவேகமாய் அப்பன்றிக்கு முன்போய் (௫௦) அதை எதிர்த்து நின்று கையிலிருந்த வாளால் அதின் மார்பில் கோபத்தோடு வெட்டினான். வெட்டலும் அது பயந்ததுபோல் (௫௧) வில்லைப் போட்டுவிட்டு, மார்பில் கொஞ்சம் பட்டகாயத்தின் வழியாய் ரக்த்தம் பெருகி வழியெல்லாம் சிந்த வடக்கு முகமாய்த் திரும்பி ஓடிற்று. சந்திரகுலத்தில் பிறந்த புரூரவாராஜனும் அங்கு (௫௨) போட்டவில்லை எடுத்துக்கொண்டு அதனால் சந்தோஷமடைந்து பகவானை வராஹரூபம் கொண்டவரென்று அறியாமல் மறுபடியும் பின் ஓடிச்சென்றான். (௫௩)

இவ்விதம் பகவான் வராஹரூபம் கொண்டு புரூரவாராஜனின் வில்லைப்பறித்து இழுத்துக்கொண்டுவந்த பூமியில் கோடாகப் பள்ளம் ஏற்பட அவ்வழியே "முக்தகார்முகை" என்ற நதியாயிற்று (௫௪) (இது ஸத்திய க்ஷேத்திரத்தின் தெற்கு எல்லை) பகவானும் அரசன் பின்தொடர்ந்துவர அவன் கையில் பிடிக்கும்படியாக அதிஸமீபத்தில் வருகிறதும், உடனே கையில் அகப்படாமல் நெடுந்தூரம் சென்று விடுவதும், ஒரு விடத்தில் திகைத்து நிற்பதும், பிடிக்கப் போகும்போது ஓடிவிடுவதுமாக ஸத்தியகிரி வந்துசேர்ந்தார். (௫௫)

புரூரவனும் அப்பன்றியைப் பின்பற்றிச்சென்று ஓடி இளைத்து உடம்பெல்லாம் வியர்க்கப்பெற்று சிரமத்தால் வாயைத் திறந்து மூச்சுவிட்டுக்கொண்டு அம்மலையின் அடிவாரமடைந்தான். பிறகு(௫௬) பகவானும், வேட்டையாடுவதில் ஸாமர்த்தியமுடையவனாக விருந்தும் இப்பொழுது ஏங்கி இளைத்து நிற்கும் அரசனைக்கண்டு மெள்ளச்சென்று அம்மலையின் குஹைக்குள் பிரவேசித்தார். (௫௭)

அரசனும் ரோஷத்தால் பின்சென்று தானும் அந்த மலைக்குஹைக்குட் சென்றான். அவ்விடத்திலிருந்த ஒரு பெரும் பாம்பானது விஷஜ்வாலையோடு கூடிய நேத்திரங்களுடையதாய் புதனுடைய(௫௮) புதல்வனான புரூரவனைத் தனது உடலால் நெருங்கச் சுற்றிக்கொண்டு நிறுத்திவிட்டது. இவ்விதம் அவ்வரசன் பாம்பால் சுற்றப்பட்டிருந்தும் பலசாலியாகையால் அந்த ஸர்ப்பத்தைத் தன் கையாலேயேஇழுத்து எறிந்துவிட்டு அக்குகையில்நின்றும் வெளியில் வந்துவிட்டான். பகவானும் வராஹ ரூபத்தோடே சீக்கிரமாய் அரசனுக்கு முன்னாகவந்து அங்கு ஆலமரத்தடியில் தவம் செய்துகொண்டிருக்கும் மகாத்துமாவான ஸத்தியரிஷியின் ஸமீபமடைந்து மனிதன் பேசுவதுபோல் சொல்லுகிறார். (௬0இ)

ஓ மகரிஷியே! புதபுத்திரனான "புரூரவன்" என்ற இவ்வரசன் தம்மைப்பலதடவை வணங்கி ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தவனாய் தம்மை ஆசரித்து நிற்கிறான். என்று பகவான் சொல்ல "தக்ஷகன்" என்ற விஷ்ணு கிங்கரனும் எனக்கு எவரது பாதஸ்பர்சத்தால் பாவங்களெல்லாம் விலகிவிட்டனவோ அந்த புதபுத்திரனான புரூவன் இவர்தான். என்று தெரிவித்துக்கொண்டே மகா பாக்கியம் பெற்ற அம்மாமுனியை வணங்கி தமது ஆசிரமத்தையடைந்ததினால் நானும் சாபத்தில் நின்றும் நீங்கி பரிசுத்தனானேன் என்று தெரிவித்தான். (௬௩இ)

பிறகு பகவான் வராஹ ரூபத்தைவிட்டு குறைவற்றவராய், லக்ஷ்மீதேவியோடுகூட நித்தியஸூரிகள் சூழ, கருடன், ஆதிசேஷன், விஷ்வக்ஸேனர் இவர்கள் விநயத்துடன் பணிசெய்ய, சங்கு சக்கரம் முதலிய பஞ்சாயுதங்களை தரித்து குமுதன் முதலிய கிங்கரகணங்களுடன் இந்த பக்தர்கள் கண்டு ஆனந்திக்கும்படி தோற்றினார். இவ்விதம் புரூரவன், தக்ஷகன், ஸத்தியமுனிவர் ஆகிய இம்மூன்று பக்தர்களும் தன்னைக்கண்டு களிக்கும்படி ஸர்வேசுவரனான பகவான் ஸத்தியதவ முனிவரை நோக்கி ஆநந்தத்தோடு சொல்லுகிறார். (௬௬இ)

ஸகல தர்மங்களையுமறிந்த ஸத்தியமகரிஷியே! முன்பு "நீர்
இந்த ஆலமரத்தின் கீழ் தவம் செய்யும், புரூரவசக்கிரவர்த்தி இவ்
விடம் வந்தவுடன் உமக்கு மோக்ஷம் தருகிறேன்" என்று உமக்கு
வரம் கொடுத்தது முதல் நான் கடன் வாங்கினவன் நெஞ்சம்போல்
அதைப் பூர்த்திசெய்ய உபாயம் தேடினேன். இப்பொழுது பூர்த்
தியாகிவிட்டது. ஒருவராலும் ஜயிக்கமுடியாத இவ்வாசனும், சாப
த்தால் ஸர்ப்பரூபம் கொண்ட தக்ஷகனும், உம்மால் ரக்ஷிக்கத்தக்க
வர்கள். என்ற பகவானைப்பார்த்து ஸத்தியமுனிவர் கூறுகிறார். (௬௮)

ஓ ஸ்வாமி! தாம் வராஹரூபம் கொண்டு எங்கிருந்து வரு
கிறீர்? அல்பமான ஆயுள், சக்தி, அறிவு, இவைகளையுடைய மனி
தன் தவம் எங்கே? முன் இமாலயத்தில தவம் செய்துகொண்டி (௬௯)
ருந்தவென்னை ஏமாற்றிவிட்டீர். இவ்விதம் அடியார்களிடத்தில்
செய்யும் கபடத்தால் பலமென்ன? இனிமேலாவது தாம் முன்பு (௭௦)
இவ்வாலமரத்தின் கீழ் புரூரவன் வந்தவுடன் தருவதாகச்சொன்ன
வரத்தை இப்பொழுதாவது தந்தருளவேண்டும். என்று இவ்விதம்
ஸத்தியமகரிஷி சொல்லிக் கொண்டிருக்கும்போது இதற்கடுத்த
முன் க்ஷணத்திலிருந்த வாராஹரூபத்தைவிட்டு திவ்விய தேஜோம
யமான திருமேனியை பக்தர்களுக்குத் தீங்கு செய்யும் அசுரர்களை
ஸம்ஹரிக்கும் பகவான் காட்டியருளினார். அந்த திவ்வியமங்கள
விக்கிரஹத்தின் ஸன்னிதானத்திலேயே சாபத்தில் நின்றும் விடு
பட்ட தக்ஷகன் உடனே பாம்பினுருவை விட்டு பகவானுடைய ஸ
மீபம் வந்து அடிமைபெற்று ஆனந்தித்தான். புரூரவச்சக்கர்வர்த்
தியும் அக்காலத்தில் அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற திருக்
கண்களையுடையவனும், ஆகையால் எல்லா உலகங்களுக்கும் கார
ணவஸ்துவும், பக்தர்களின் இஷ்டங்களை விசேஷமாய்க் கொடுத்
தளிப்பவனுமான பகவானை கண்ணாரக்கண்ட களிப்பினால் சரீரத்
தில் மயிர் சிலிர்த்து, தன் அங்கமெல்லாம் புழுதியாகத் தடிபோல்
விழுந்தெழுந்து தேவர்களுக்கெல்லாம் தேவனாய், லீலையால்
கைக்கொண்ட உருவுடன் ஒளிமிகுந்து விளங்கும் பகவானுடைய
முன்னிலையில் மிகவும் துதிசெய்து நின்றான். (௭௪)

அப்பொழுது பகவான் ஸத்தியமுனிவரை நோக்கி பிர்மாவி
ன் குமாரர்களான ஸநத்குமாரரும் ஸநந்தனரும் (ஸநகரும், ஸநத்
ஸுஜாதரும் என்றும் தொக்கி நிற்கிறது. ஸநகாதிகள் நால்வரா
கையால்) க்ஷீராப்தியில் என்னிடத்தில் எப்பொழுதும் எவ்விதம்
ஆனந்தத்துடன் வஸிக்கிறார்களோ அவ்விதம் நீரும் என்னிடத்
தில் வஸிப்பீர் என்று அனுக்கிரகம் செய்தார். அடியாரிடத்தில் (௭௫)

அதிக வன்புள்ள குணநிதியான பகவான் ஸத்தியரிஷியை அனுக்கிரகித்தபின் பக்ஷிராஜன்மேல் வீற்றிருந்து அரசனை நோக்கியருளிச்செய்கிறார். (எகூ)

ஓ புசபுத்திரனன பூபதியே! நீ மனத்தாலேயே நாடோறும் டைய ஆராதனம் செய்து வந்தபடியால் உனக்கு வேண்டும் என்று வரந்தருவதற்கு நான் என் பரிவாரங்களுடன் வராஹரூபம்தரித்து வந்து உன் ராஜ்பத்தைக் கலங்கச் செய்து, அதனால் எங்களைபின் தொடர்ந்த உன்னையும் இப்பெரிய காட்டிற்கொண்டுவந்து இந்த ஸத்தியக்ஷேத்திரத்தில் நீ பரிசுத்தனகையால் உனக்குத் தர்சனம் கொடுத்தோம். ஆகையால் நீ கோரியதைக் கொடுக்கிறோம். இஷ்(எஅ) டத்தை வேண்டிக்கொள்ளும் அரசனே என்று பகவான் சொல்ல புரூரவசக்கரவர்த்தி விண்ணப்பம் செய்கிறார். (எஅஇ)

ஸ்வாமீ என்னுடைய இருகண்களும் தேவரீருடைய திருமேனியின் அழகைக்கண்டதினால் பயன்பெற்றன. எனதிருகாதுக(எகூ) ளும் தமது வாக்காகிய அமிருத ரஸத்தை உண்டதினுல் பயன் பெற்றன. உலகில் பிராணிகளின் தலை மற்ற அங்கங்களைவிட உத்தமமானதால் அதை "உத்தமாங்கம்" என்பார்கள். என் சிரஸும் தம் பாதங்களில் வணங்கியதால் " உத்தமாங்கம் " என்ற பதத்தின் பொருளைப் பெற்றது. என் நாவும் தமது நாமங்களா(அO) யிரமும் பிதற்றும் ரஸத்தையறிந்து "ரஸனை" என்று பெயர் பெற்றது. என்னுடைய இவ்விரு கைகளும் கூப்பி நிற்றலாகிய "அஞ்சலி" என்ற பரம முத்திரையை இதர விஷயத்தில் செய்யாமல் வகுத்த விஷயமான தம்மிடத்தில் செய்தமையால் எனக்கு நன்மையைச் செய்தன. என் பாதமும் தாம் நித்தியவாஸம்(அக) செய்யும் இவ்விடம் வந்து தமது முன் நிற்பதால் நான் அதை ஸம்பத்தாக எண்ணுகிறேன். ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் ஆகிய குணநிதியாய் பரமானந்தத்தை யுடையனய், பக்தர்களைக்காக்கும் விஷயத்தில் கங்கணம் கட்டித்திரியும் பெருமையுடைய ஸ்வாமீ! பிறப்பிறப்பாகிய "ஸம்ஸாரம்" என்ற கரைகாணுக்கடலில் வீழ்ந்தமுழ்ந்திக்கிடப்பேனை " அஞ்சேல் " என்றருளிச் செய்து இக்கரையும் அக்கரையும் ஒத்துநிற்கும் தமது பாதங்களான பெருங்கப்பலைக் கொடுத்துக் கரையேற்ற வேண்டும். (அஉஇ)

பிரபோ! இவ்வுலகத்திலுள்ள சக்கரவர்த்திப் பட்டத்தையும், இதற்குமேற்பட்ட இந்திரபதவியையும் அதற்கும் மேலான பிர்மப் பட்டத்தையும் யான் வேண்டேன். தமது திவ்வியாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறியத்தக்க ஞானசக்தியை மட்டில் எனக்குத்

சந்தருளவேண்டும். ஈதேவேண்டுவது மற்றொன்றும் வேண்டாம். என்ற புரூரவனை நோக்கிப் பகவான் அருளிச்செய்கிறார். (௬௫)

ஓ புரூரவனே! நீ கோரியபடி ஞானசக்தியை இப்பொழுது தந்தேன். அதனால் எனது மாயையை ஜயித்து இல்லறத்தில் பற்றுதலற்று என்னையே ஸேவித்திருப்பதுடன், இந்த ஸத்திய கிரியில் எனது பிம்பத்தை ஸத்தியரிஷியானவர் எவ்விதம் ஆராதித்தனரோ, அவ்விதமே நீரும் இன்று முதல் இங்கு ஆராதித்துக் கொண்டு தவம் செய்திரும். இவ்விதம் நீர் தவத்திலாழ்ந்ததை அறிந்த உன் புத்திரனை "கமலநயனன்" என்பவன் நீ ஆண்டு வந்த ராஜராஜப் பதவியை அடைந்து சக்கரவர்த்தியாகிவிடுவன். அக்கமலநயனனே இந்த க்ஷேத்ரம்வந்து எனது பிம்பத்தின் ஆராதன பரிசரியைகளுக்குப் பிராமணர்களை ஏற்படுத்திப் பிர்மக்ஷேத்திரமாக (பிராமணர் வஸிக்கும் இடமாக)ச் செய்து வைப்பன். (௬௭) அக்காலத்தில் அவனைக்கொண்டு, மேல் தளங்களையும், மண்டபங்களையும், சுற்று மதிள்களையும், கோபுரம் முதலியனவற்றையும் எனது பிர்மோத்ஸவத்தையும் உனது புத்திக்குத் தக்கபடி நீ செய்வித்து வைக்கவேண்டும். நீ வேறு விஷயத்தில் ஆசையற்றவனாய் (௬௮) மூன்று வருஷங்களைக் கழித்தபின் இப்பொழுது தர்சனம் கொடுத்ததுபோல் மறுபடியும் தர்சனம் கொடுப்பேன். அக்காலத்தில் என்னுடைய ஸ்தானத்தை யடைவாய். என்று புரூரவராஜனுக்குச் சொல்லிவிட்டு தக்ஷகன், ஸத்தியரிஷி, இவர்களுடன் மறைந்தார்.

பிறகு புரூரவராஜன், "அஷ்டாக்ஷரம்" என்ற மகிமை தங்கிய மந்திரத்தை மனதில் நன்றாய்நினைத்து அளவற்ற பலத்தைத்தரும் ஸத்தியகிரி நாதனுடைய பூஜநம் செய்யத் தொடங்கினன். கமலநயனனைக் கொண்டு பணிகள் முதலியவைகளைச் செய்வித்து மூன்று வருஷம் ஆலமரத்தின் அடியில் வஸித்துக்கொண்டு ஸம்ஸாரத்தில் நசையற்றுப் பகவானை அடையவேண்டி அவருடைய கடாக்ஷத்தால் உத்தமபதவியை அடைந்தான். (௬௯)

இவ்விதம் புரூரவராஜன் எங்கும் நிறைந்த ஜயசீலனான பகவானுக்கு மானஸாராதனம் செய்து புத்திரனை கமலநயனனுக்கு பட்டம்கட்டி மாயாவராஹத்தின் பின்சென்று வேட்டையாடி ஸத்தியகிரி நாதனை ஆராதித்து உத்தமபதத்தை அடைந்தான். (௭௦)

ஸத்திய க்ஷேத்திர மகிமையில்
புரூரவ சரித்திரம் என்ற
ஆறுவது அத்தியாயம்
பூர்த்தி பெற்றது.

---

## ஏழாவது அத்தியாயம்.



ஸ்ரீ மகேசுவரன் நாரதரை நோக்கி, 'கிருதகம்' என்ற பூலோக புவர்லோக ஸுவர்லோகங்களும் 'அகிருதகம்' என்ற ஜநலோக தபோலோக ஸத்திய லோகங்களும், 'கிருதகாகிருதகம்' என்ற மகர்லோகமும், ஆகிய மூவுலகத்தவர்களாலுங் கொண்டாடத்தக்க நாரதரே! நீர் எவ்விஷயங்களைக் குறித்துக் கேட்டீரோ அவை யெல்லாவற்றையு முரைத்தேன். இன்னும் வேறு விஷயம் கேட்க வேண்டுமென எண்ணுகிறீரா? என்ற மகேசனை நோக்கி நாரதர் கேட்கிறார். (க)

தேவர்களுக்கும் தேவனான பகவானுடைய தாஸனாய் அதனால் மிக்க தேஜஸுடன் விளங்கும் தக்ஷகனை துர்வாஸர் எக்காரணம் கொண்டு சபித்தார் அதை உரைத்தருள வேண்டுமென்ற நாரத ருக்கு மகேசுவரன் சொல்லுகிறார். (உ)

எனது அம்சத்தால் ஜனித்த "துர்வாஸர்" என்பவர் யோகீசு வரராய் உடுக்கும் வஸ்திரமின்றி ஸஞ்சரிக்கும்போது ஒருநாள் விஷ்ணுவைத் தர்சிக்கவேண்டி, நினைத்தபடி வருத்தமின்றி ஸஞ்ச ரிக்கும் திறமையுடையராகையால், திருப்பாற்கடலில் சுவேதத் (ஈ) தீவத்தில் விஷ்ணுபுரத்தில் பகவானுடைய ஆலயத்தில் முதற்கோ ட்டை வாசலுள்புகுந்தார். இவ்விதம் வஸ்திரமின்றி வந்த துர்வா ஸரை நோக்கி நீ வஸ்திரமின்றி அவதூதவேஷம் கொண்டிருப்ப தால் "மாஸர்ப்ப" போகாதே என்று அவ்வாசலில் காவல் புரிந்த தக்ஷகன் தடுத்தான். இவ்விதம் தடுக்கப்பட்ட அம்முனிவர் கோப த்தால் இருகண்களும் சிவந்தவராகி வஜ்ராயுதத்திற்கு நிகரான தன் வாக்கினால் அந்தத் துவாரபாலனைப் பெரும் ஸர்ப்பமாகும்படி சபித்து வீழ்த்தனர். தக்ஷகனும் துர்வாஸரிஷியின் சாபமானதால் (ரு) உடனே பாம்பினுருவை யடைந்து அவ்வுருவோடே உட்புகுந்து அடியார்களின் துன்பத்தை நீக்கும் பகவானுடைய முன் நின்று சொல்லுகிறான். (எ)

உலகங்களுக்கு ஈசுவரர்களாக விளங்கும் இந்திரன் பிர்மாமுத லியவர்களுக்கும் ஈசனாகி ஆதியந்தமற்று நிற்கும் ஸ்வாமீ! "ஜய விஜயீபவ" என்று ஜயம்கூறி, நான் தமது முதல் பிராகாரத்தின் வாசல்காக்கும் தாஸனான தக்ஷகன். யாரோ ஒருவர் உடுக்கும் வஸ் (அ) திரமின்றி வாசலில்வர, அவரது வேஷத்தைக்கண்டு "மாஸர்ப்ப" (உள்ளே புகுதாதே) என்று நிறுத்தின பிறகு அவரிட்ட சாபத் தால் மகாஸர்ப்பமானேன். நான் என் வேலையை நடத்தினேனே

யொழிய ஒருவித குற்றமும் செய்யவில்லையே. தம்மையே பற்றின தம்மடியார்களுக்கு இந்தக் கதிவருவது தக்கதன்று. ஆகையால் தமதடிமையான வென்னை கடாக்ஷித்தருளவேண்டும். என்று (கo) கூறும் தாஸனான தக்ஷகனை நோக்கிப்பகவான் அருளிச்செய்கிறார். கoஇ)

ஓ தக்ஷகனே! உனக்கு முன்செய்த வினையால் இக்கதி நேரிட்டது. பிராமணர் செய்ததை மாற்றுவதற்கு பிர்மா, ருத்திரன், இந்திரன், சந்திரன், சூரியன் முதலிய எல்லாதேவர்களும் ஒன்றுகூடினாலும் முடியாது. பிராமணர்கள் தவத்தையே பொருளாய்க் கொண்டுஎன்னுடையசட்டமான வேதத்தைக் காப்பவர்கள். அந்த துர்வாஸரிஷி செய்தது சட்டத்தை மீறி இருக்கமாட்டாதாகையால் அவர்சாபத்தை நீக்க எனக்கு மனமகொள்ளாது. ஆனது பற்றி அபராதிகளிடத்தில் கோபமுள்ளவரும் தபஸால் பெருமை பெற்றவருமான துர்வாஸமுனிவரை அவர் மனமுகக்கும்படி பணிந்து கேட்டுக்கொள். (கரு)

என்று பகவான் நியமிக்க தக்ஷகன் ஓடிவந்து, பட்டணத்தின் கோட்டை வாசலில் நிற்கும் மகாமுனிவரை நமஸ்கரித்து கேட்டுகொள்ளுகிறான். ஓ மாமுனிவரே! தமது ஸ்வரூபத்தை யறியாத என்னால் செய்யப்பட்ட குற்றத்தைத் தாம் பொறுத்தருளி இந்த மகாசாபத்தை நீக்கும் வழியைச் சீக்கிரத்தில் உரைத்தருளவேண்டும். என்று வேண்டின தக்ஷகனை நோக்கி துர்வாஸர் கூறுகிறார் (கசஇ)

தக்ஷகனே! தமோ குணங்கொண்டு அதின் பலமாக ஒருவன் செருக்கால் செய்த பாவம் ஸாத்விக குணத்தாலேயே போக்கத்தக்கது. அந்த ஸாத்விகருணம் ஸத்துக்களின் சேர்க்கையினாலேயே உண்டாகவேண்டும். ஆகையால் நல்ல முனிவரின் பாததூளி படிதலால் பாக்கியம் பெற்ற மூங்கிற்காடாய் நிற்கும் வனத்தில் (ஸத்திய க்ஷேத்திரத்தில்) நூறு வருஷம்வரை இப்பாம்பின் ரூபத்துடன் வஸிப்பாய். அதன் பிறகு அவ்விடத்தில் புதன் புத்திரனான புரூரவ சக்கரவர்த்திக்காக எங்கும் நிறைந்த பகவான் பிரத்தியக்ஷமாகும் ஸமயத்தில் நீயும் அவருடைய ஸமீபமடைந்ததனால் சாபம் நீங்கினவனாவாய். (களஇ)

இவ்விதம் துர்வாஸரிஷி சொல்லி நிச்சயித்துவிட்டு சுவேதத்தீவில் ஸஞ்சரித்து நின்றார். உடனே அவர் சொல்லியபடி தக்ஷகனும் ஸர்ப்பரூபத்தோடு ஸத்தியகிரியில் வந்து வஸித்தான். என்று சொல்லிவிட்டு மகேசுவரன் ஓ ரிஷிகளுள் சிறந்த நாரதரே! ஒருநாள் அந்த ஸர்ப்பத்தால் செய்யப்பட்ட பெரிய ஆச்சரியத்

தைச் சொல்லுகிறேன் கேளும். என்று சொல்வி மகேசுவரன் அவ்வாச்சரியத்தைக் கூறுகிறார். (கக௯)

"வேதசர்மா" வென்று உலகில் பிரஸித்தி பெற்ற ஓர் பிராமணன் பிர்ம்மசரியம், கார்ஹஸ்தியம், வானப்பிரஸ்தம், ஸன்னியாஸம் என்ற நால்வகை ஆசிரமங்களுக்குள் பத்தினியுடன் காட்டிலே வஸித்தலான "வானப்பிரஸ்தம்" என்ற ஆசிரமத்தையுடையராய் தன் பத்தினியுடன் புண்ணிய தீர்த்தங்களையுடைய பெருங்காட்டில் ஸஞ்சரித்தார். அவரும் இந்த ஸத்தியகிரியை யடைந்து புஷ்கரிணியில் ஸ்நானம்செய்து கர்மானுஷ்டானம் செய்து இடத்தின் வாய்ப்பினால் இங்கேயே வஸித்துவந்தார். அவர் இங்கு வந்தவுடன் (உக) அவருடைய மனைவியான "சிரீமதீ" என்பவள் கர்ப்பந்தரித்தாள். அவளும் இந்த க்ஷேத்திரத்திலேயே ஓர் புத்திரனைப் பெற்றாள். வேதசர்யாவும் மிகவும் ஆனந்தமடைந்தார். (வானப்பிரஸ்தாசிரமிக்கும் இந்த க்ஷேத்திரம் வந்தவுடன் கர்ப்போத்பத்தி யுண்டானதால் இந்த க்ஷேத்திரம் புத்திரனைக் கொடுக்கக்கூடியதென்று இதனால் தெரியவருகிறது.) (உஉ)

பிறகு அவர் புத்திரகளத்திரங்களோடு ஸுகமாய் வஸிக்குங் காலத்தில் ஒருநாள் ராத்திரியில் மிகவும் பசியால் வருந்தின அந்த தக்ஷகனுகிய பெரும் பாம்பானது இந்த அந்தணரின் ஆசிரமத்துக்குட் புகுந்து, நன்றுய்த் தூங்கும் அச்சிசுவை அங்கேயே விழுங்கி விட்டு அங்குள்ள உருண்டைமலையின் அடியிலிருக்கும் குகைக்குள் மெள்ளப் புகுந்துவிட்டது. (உ௩)

பொழுது விடிந்தவுடன் எழுந்த தாய்தந்தையர் சிசுவைக்காணுமல் அங்குமிங்கும் பார்க்கும்பொழுது பெரு நடையுள்ள வழிபோல் பாம்பினல் தேய்க்கப்பட்டிருப்பதைக் கண்டார்கள். கண்ட (உ௫) வுடன் நமது புத்திரனை மலைப்பாம்புதான் விழுங்கிவிட்டதென்று தெரிந்துகொண்ட அந்தண சிரோமணியான வேதசர்மா ஸர்ப்பங்களைக் கொல்லும் சூன்யமந்திரத்தால் ஓமம்செய்ய ஆரம்பித்தார். (உ௬) ஆரம்ப ஸமயத்தில் பிராணுயாமம் (சுவாஸபந்தம்) செய்துவிட்டு ஸங்கல்பம் செய்துகொண்டு ஸர்ப்பசத்துருவான கருடனை நினைத்துத் தானும் கருடனுகிக் காரியம் நடத்தினர். (புழு, குளவியா (உஎ) வதுபோல் ஒருமைப்பட்ட எண்ணத்தால் அந்த ரூபம் அடையலாம்) இவர் ஸங்கல்பம் செய்யும்பொழுதே அந்த பாம்பான தக்ஷகன் அம்மந்திர பலத்தாலுண்டான தாபம் பொறுக்கமுடியாமல் சீக்கிரமாக குஹையினின்றும் வெளிப்பட்டு வேதசர்மாவின் ஆசிரமத்தை யடைந்து, எரியும் நெருப்புப்போன்ற தேஜஸையுடைய (உஅ)

அவரை வெகுதூரத்தில் நின்று வணங்கி மனிதர் பேசும் பேச்சால் ஸர்ப்பரூபியான தக்ஷகன் சொல்லுகிறான். (உக)

மந்திரமறிந்த வந்தணர்களுக்குள் சிறந்த வேதியரே! நான் முற்காலத்தில் தூர்வாஸரிஷியின் சாபத்தால் பாம்புருக்கொண்டு பழுதானேன். இப்பொழுது தம்மால் நினைக்கப்பட்ட பக்ஷிராஜனை கருடனுடைய கோபாக்கினி ஜ்வாலையால் சூழப்பட்டு மிக (ருo) வும் கொளுத்தப்படுகிறேன். எனக்கு நடுக்க முண்டாய்விட்டது. நான் கெட்ட குணத்தால் அறிவிழந்தேன். அதனால் நான் தமக்குச்செய்த பெருங்குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும். தமது புத்திரனை யான் விட்டுவிடுகிறேன். பலமுடையவர்களுக்குப் பொறுமையே அழகு. ஆகையால் ஸர்ப்பங்களை யெல்லாம் கொல்லுவதாகத் தாம் செய்த உறுதியை விட்டுவிடவேண்டும். என்று சொல்லிவிட்டு அந்த தக்ஷகன் தன் வயிற்றுக்குள்ளிருந்த சிசுவை உயிர்ச்சேதமின்றிக் கக்கினான். இவ்விதம் ஆச்சரியப் படும்படியாக (ருஉ) வந்த புத்திரனைத் தாய் தந்தையரான சிரீமதியும் வேதசர்மாவும் கண்டுகளித்து பாம்பின் வாயிலிருந்து தீங்கின்றிவந்ததினால் அன்புடன் ஆரத்தழுவி ஆனந்தத்தையடைந்து யாகத்தை நிறுத்திச் சுகமாக வாழ்ந்தனர்கள். (ருரு)

இவ்விதம் சுவேதத்தீவில் பகவானுடைய கோட்டை வாசற் காவல்பூண்ட தக்ஷகன் என்பவன், கோபங்கொண்ட தூர்வாஸரிஷியினால் அங்குசபிக்கப்பட்டு உடனே பாம்பினுருவையடைந்துபிறகு இங்கு ஸத்துக்களான ஸத்தியரிஷி, வேதசர்மா, புரூரவசக்ரவர்த்தி இவர்களையுடைய ஸத்திய க்ஷேத்திரத்தில் பகவானுடைய அனுக்கிரகத்தால் முன்போலவே விஷ்ணு கிங்கரரூபத்தை யடைந்தான். (ருச)

என்று பிர்மாண்ட புராணத்தில்
மகேசுவரநாரத ஸம்வாதத்தில்
ஸத்தியக்ஷேத்திர மகிமையில்
தக்ஷகன் கதை என்ற
ஏழாவது அத்தியாயம்
பூர்த்தி பெற்றது.

---

ஸ்ரீ ஸத்தியமூர்த்தயே நம:

## எட்டாவது அத்தியாயம்.



ஸ்ரீ நாரதமுனிவர் ஸ்ரீ மகேசுவரனை நோக்கி மார்க்கண்டேயனுக்காக யமனை ஜயித்து "காலகாலன்" என்று பெயர்பூண்ட ஸ்வாமி! தக்ஷகன் கதை தாம் சொன்னது நன்றாயிருந்தது. இன்னும் "இந்திரத்தியும்னன்" சரிதத்தைக் கேட்க ஆவலுள்ளவனாயிருக்கிறேன். அதை உரைத்தருள வேணுமென்று கேட்க மகேசுவரர் கூறுகிறார். (க)

மிக்க தேஜஸையுடைய "இந்திரத்தியும்னன்" என்ற ராஜரிஷி மகததேசங்களுக்கு அரசனாகி, திக்விஜயம் செய்ய சேனைகளுடன் தென்திசை நோக்கிச்சென்றான். அத்திசையில் தமிழ்தேசத்தை (உ)
யடைந்து வெள்ளாற்றின்கரை ரம்மியமாக இருந்ததால் அங்கு ரதத்தை விட்டிறங்கி அந்நதியில் ஸ்நானம் செய்து பகலில் செய்ய வேண்டிய அனுஷ்டானங்களைச் செய்து முடித்துக்கொண்டான். (ந)
அப்பொழுது அவனேறிவந்த தேரானது ஸாரதி குதிரைகளுடன் மாயையால் காணாமல் போய்விட்டது. அரசன் திரும்பித் தேரில் ஏறப்பார்த்தபோது ரதம் காணப்படவில்லை. "இவ்விடத்தில் (ச)
தேவர்களாலோ ராக்ஷஸர்களாலோ நமது தேரானது இப்பொழுது கொண்டுபோகப்பட்டது. திக்விஜயம் செய்யவந்து தேரிழந்தோமே" என்று திகைத்தவனாய் மேல்நடத்தும் விஷயத்தில் மதி மயங்கினவனாய் நின்றான். இப்படித் திகைத்து நிற்கும் ஸமயத்தில் (ரு)
கிழவனான பிராமணர் ஒருவர் வந்துசேர்ந்தார். அவரைக் கண்டு அரசன் விநயத்துடன் வணங்கிக் கைகூப்பிக் கேட்கிறான். (சா)

கிழவரே! தாம் எங்குள்ளவர்? துஷ்டஜந்துக்களாலும் செடி கொடி முதலியவைகளாலும் நிறைந்த இப்பெருங் காட்டில் ஒருவரும் துணையில்லாமல் இங்குவந்த காரணம்யாது? என்று வினவிய (எ)
அரசனை நோக்கி பிராமணர் சொல்லுகிறார்.

ஓ மகாராஜரே! தமக்கு மங்களமுண்டாகக் கடவது. இந்தக் கிராமம் வெகுகாலமாய் என்னுடையதே. எனக்கு இரண்டு புத்திரர்களுண்டு. அவர்களில் ஒருவன் அங்கவீனன். ஒருவன் வெகுமுகன். (அங்கவீனன் என்றது மன்மதனை. வெகுமுகன் என்றது நான்முகனான பிர்மாவை) நானோ கிழவன். வீடோ பிரிந்து ஜீர்ண (அ)
மாகிவிட்டது. அதைப் புதுப்பிக்க சக்தியற்றவன். ஆகையால் தங்களைப்போன்ற பிரபுக்களை ஆசிரயித்து அவர்களிடம் சொல்லு

வதற்காக அநாதனுய்ச் செல்லுகிறேன். (அநாதன்—தனக்கு (கூ)
மேல்பட்டவரில்லாதவன்) என்ற கிழவரை நோக்கி இந்திரத்தியும்
னன் சொல்லுகிருன்.

ஓ விருத்தரே! நான் மகததேசத்தரசன். என்னை "இந்திரத்
தியும்னன்" என்று சொல்லுவார்கள். நான் திக்குவிஜயம் செய்ய
வந்தேன். இங்கு என் தேர் காணுமல்போயிற்று. அது தேவர்
களாலோ, ராக்ஷஸர்களாலோ கொண்டுபோகப் பட்டதென்று
தெரியவில்லை. நீரோ எவ்விதத்திலும் குற்றமற்றவர்தான். ஆனுல்
இந்த கிராமம் தம்முடையதென்று தாமே சொன்னீர். ஆகையால் (கக)
அத்தேரை மறைத்தது தாமாகவே இருக்கலாமென்று எண்ணு
கிறேன். என்று இவ்விதம் இந்திரத்தியும்னன் பரிஹாஸத்துடன்
சொன்ன மொழியைக்கேட்ட அவ்வந்தணர் இந்திரத்தியும்னனை
நோக்கிப் பதில் கூறுகிருர். (கஉஇ)

ஓ ராஜனே! நான் கிராமமுடையவன். நான் கிராமம் முழு
வதும் தெரிந்தவன். அதனுல் என்ன? ஆனுல் இவ்விடம் தேவ(கரு)
பூமியாகையால் இவ்விடத்தில் நீர் தேரோடு வந்ததினுல் அந்தத்
தேவதையால் தேர் மறைக்கப்பட்டிருக்கும். தேவதைகளையோ
மந்திரத்தால் வசப்படுத்தலாம். அப்படிச் செய்யும் மந்திரமெல்
லாம் என்னிடமிருக்கிறது. எனக்கு இஷ்டமான காரியத்தை நீ(கச)
முடித்துத்தந்தால் உன் இஷ்டத்தைப் பூர்த்திசெய்துவைக்கிறேன்.
என்று இவ்விதம் சொன்ன விருத்தரை நோக்கி அரசன் சொல்லு
கிருன். (கசஇ)

விருத்தரே! இருள்மூடித் திகைக்கும் ஸமயத்தில் ஸூர்யன்
போலவும், வியாதியினுல் கஷ்டப்படும்போது நன்கமைந்த வைத்
தியன் போலவும், பொருளில்லாமல் வறுமையடைந்த ஸமயத்தில்
குபேரனது நிதிபோலவும் எனக்கு இப்பொழுதுண்டான மதிப்புக்
குறைவான ஸமயத்தில் தாம் வந்து எதிர்ப்பட்டீர். பிராமணோத்
தமரே! தேவமாயையால் கொண்டுபோகப்பட்ட என் ரதத்தை
தாம் இப்பொழுதே தெரியும்படி செய்தால் ஜீரணமான உமது
கிருகத்தைப் புதுப்பித்து உம்மை ஸுகமாயிருக்கும்படி செய்
கிறேன். (கரு)

என்று அரசனுல் ஒப்புக்கொள்ளப்பட்ட வார்த்தையை அந்த
ணராய்வந்த பகவான் கேட்டுத் தேரைத்தருவிக்கவேண்டி முயற்சி
செய்பவராய் சூர்யனைப்பார்த்து ஜபம் செய்பவர்போல் முகூர்த்த
காலம் (இரண்டு அல்லது இரண்டரை நாழிகை) அசைவற்று நின்

ரூர். அவ்விதம் ஜபித்துக்கொண்டிருக்கும் பொழுதே குதிரைகள் ஸாரதியுடன் அத்தேரானது ஆகாயத்தில் புலப்பட்டது. (தேர் காட்டின விடமானதால் தேர்க்காட்டூர் என்ற கிராமமிருக்கிறது.) இவ்விதமான பெருவியப்பைக்கண்ட அரசன், இவர் மனுஷியரல்லர், தேவன். என்றே எண்ணிக்கொண்டு புண்ணிய மூர்த்தியான பிராமணோத்தமரைத் தன் வாயார வாழ்த்தினபின் தமது ஜீர்ணமான கிரஹம் எங்கிருக்கிறது? அதைப் புதுப்பிக்கத் தெரிவித்தருளவேண்டும். என்ற இந்திரத்தியும்ன ராஜனை நோக்கி அந்தணர் அருளிச்செய்கிறார். (ககூ)

ஓ ராஜேந்திரனே! இதற்குத் தெற்கில் இரண்டு குரோச தூரத்தில் (குரோசம்— மைல்) "ஸத்தியகிரி" என்ற ஓர் மலை தெரியும்.(உ0) அம்மலையின் அடிவாரத்தில் நான் எப்பொழுதும் வஸிக்கக்கூடியதும், ஸத்துக்கள் தங்குமிடமுமான என் வீடிருக்கிறது. என்று சொன்னவுடன் பிராமணர் அரசன் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தார். அரசன் தேரும் அவன் ஸமீபம் வந்து சேர்ந்தது.(உக) மகதராஜனும் இது தேவனுடைய மாயைதானென்று நிச்சயித்துக் கொண்டு, அந்தப் பிராமணோத்தமருடைய பிரிந்திடிந்த வீட்டைப் பார்ப்பதற்கு ஸத்தியகிரியைவந்தடைந்தான். அங்கு தவம்செய்து(உஉ) கொண்டிருக்கும் பெரியரான "புருகுத்ஸர்" என்ற ரிஷியையும் கண்டான். கண்டதும் அம்மஹானை கிரமப்படி விநயத்துடன் வணங்கி அவரால் வெகுமதிக்கப்பட்டவனாய்ப் பின்வருமாறு விண்ணப்பம் செய்தான். ஸ்வாமி! என்னை "இந்திரத்தியும்னன்"(உரு) என்று தாம் அறியவேண்டும். நான் திக்விஜயம் செய்ய இங்கு வந்தேன். ஓர் பெரிய ஆச்சரியம்கண்டேன். அதாவது முதலில்(உச) என் தேர்காணமல் போய்விட்டது. அதன் பிறகு ஓர் அந்தணர் வந்தார். இந்த க்ஷேத்திரத்தில் என்னுடைய வீடொன்று இடிந்து ஜீர்ணமாக இருக்கிறதென்றார். அவரோ மகாமந்திரம் தெரிந்தவர்(உரு) அவரால், மறைந்த என் தேர் கொண்டுவரப்பட்டது. அப்பொழுது அதிசீக்கிரத்தில் என் கண்காணது அவர் மறைந்துவிட்டார்.(உசு) இதென்ன ஆச்சரியம்? யாதொன்றும் அறிகிலேன். சென்ற காலம் நிகழ்காலம் வருங்காலம் ஆகிய முக்காலத்திலுள்ளவைகளை யெல்லாம் தாம் அறிவீராகையால் இதின் உண்மையைத் தெரிவித்தருளவேண்டும் என்ற ராஜனை நோக்கி புருகுத்ஸரிஷி சொல்கிறார்.

ஓ ராஜனே! உம்மைப் பார்க்கவந்த வயதுசென்ற பிராமணர் இந்த ஸத்தியகிரி நாதனான பகவானே. இந்த ஸத்திய க்ஷேத்ரம்(உஎ) (திருமெய்யம்) தவத்தின் உயர்வைத் தரக்கூடியது. மிகவும் உத்

தமமானது. இந்த க்ஷேத்திரத்தில் ஆதிசேஷன் தவம் செய்து
ஸித்திபெற்றார். பிறகு சந்திரன், பிறகுவிநதையின் புத்திரனான (உஅ)
கருடன், அதற்கப்பால் ஸத்தியரிஷி, பின்பு புரூரவ சக்கரவர்த்தி,
அதன்பின் கமலநயனராஜன் என்னும் இந்த ஆறு பெயர்களும்
இந்த அர்ச்சாவிக்கிரஹத்தை பூஜித்து நிலைநிறுத்தினவர்கள். (உகூ)

சந்திரனால் ஆராதிக்கப்பட்ட பிம்பமானது ஸத்திய புஷ்கரிணிக்குத் தெற்கில் ததிவாமன மூர்த்தியாய் முழுமையும் சந்திர காந்தக் கல்லினால் அமைக்கப்பட்டது. அதற்கு மேற்கில் திரு (௩0)
மெய்ய மலைக்குத் தென்புரம் அடிவாரத்தில் மிக அழகுள்ளதாயும் சயனம் செய்துகொண்டிருக்கின்றதாயும் அமைக்கப்பட்ட பிம்பமானது, ஆதிசேஷனால் பிரதிஷ்டை செய்து ஆராதிக்கப்பட்டது. (௩க)
மெய்யமலையின் உச்சியில் கருடனால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பிம்பம் உயர்ந்ததான ஒரே கருடப்பச்சைக் கல்லினால் அமைக்கப்பட்டதென்றறியும். இதற்கு நேர் கீழாக, ஆலமரத்தின் நிழலுள்ள (௩உ)
விடத்தில், முன்சொன்ன சயனபிம்பத்திற்குக் கிழக்கில் ஸத்திய மகரிஷி ஆராதித்த முக்கியமான பிம்பம் இமாலயத்திலிருந்து ஸத்தியரிஷி வரும்போது கொண்டுவந்த சித்திரசிலையினால் அமைக்கப்பட்டது. அந்த பிம்பமே புதபுத்திரனான புரூரவ சக்கரவர்த்தியா (௩௩)
லும், அவன் மகனான கமலநயன ராஜனாலும் உகந்து ஆராதிக்கப்பட்டது. இதன் விமானத்திற்கு "ஸோமச்சந்தம்" என்று பெயர் இது விசுவகர்மாவாலே செய்யப்பட்டது. (௩௪)

புரூரவ சக்கரவர்த்தியும் மகா பாக்கியம் பெற்றவனானதால் இவைகளுக்கு மேல்தளம், மண்டபம், சுற்றுமதிள், கோபுரம் என்னும் இந்த திருப்பணிகளைச் செய்துவைத்து இந்த ஸத்திய மூர்த்திக்குமட்டில் ரதோத்ஸவாந்தமான பிர்மோத்ஸவத்தையும்செய்து வைத்தான். பிறகு அநேக யுகங்கள் சென்றபின் ராக்ஷஸர்களால் (௩௫)
பீடையடைந்த பூமியானது அந்தந்தக் காலத்தில் புத்திமான்களால் காலத்திற்குத் தக்கபடி ரக்ஷிக்கப்பட்டது. இப்பொழுதுதிக்கு விஜயம் செய்த தம்மால் ரக்ஷிக்கப்படுகிறது. பக்தரக்ஷணம் செய் (௩௬)
யும் பகவானுடைய கோவிலானது நீடித்த நாளானதால் ஜீர்ணமாகி இருக்கிறது. அதை உம்மைக்கொண்டு புதுப்பித்து உமக்கு நன்மை செய்யவேண்டுமென்று ஸத்தியகிரி நாதனான பகவான் பிராமணரூபமாக தம் ரூபத்தைக்காட்டி மறைந்து வந்திருக்கிறார். ஓ ராஜனே! எங்கும் நிறைந்த பகவானுடைய கோவிலை முன் போலவே நீர் புதுப்பிக்கவேண்டும். (௩அ)

என்று புருகுத்ஸரிஷி சொல்லக்கேட்டு அரசன் இருகையும்

கூப்பிக்கொண்டு பகவானுடைய கோவிலை நன்ருய் முழுவதும் பார்த்தான். பார்த்தவுடன் மிகவும் தேர்ந்தவர்களான அனேக(ருக) சில்பிகளை வேண்டியவெல்லாக் கருவிகளால் வேலைசெய்யும் உத் தரவு செய்தான். அநேக வேடர்கள்கூடி காட்டிலுள்ள துஷ்ட ஜந்துக்களைக் கொன்றபின் மலைகளை உடைத்து அதில் நின்றும் கல்லெடுத்து பகவானுடைய கோவிலை சில்பசாஸ்திரப்படி கோவி லையமைக்கும் திறமையுடையவர்களும் கைவேகமுள்ளவர்களுமான சில்பிகள் பூர்த்திசெய்தார்கள். (சக)

பிறகு அரசனும் கோவிலுக்கு ஸமீபத்தில் வந்துபார்த்து ஸம் புரோக்ஷணம் முதலிய காரியத்தை நன்ருயறிந்தவர்களும் அனுபவ முள்ளவர்களுமான புருகுத்ஸர் முதலிய பிராமணர்களைக்கொண்டு நன்ருய் முடித்து, திருமார்பில் லக்ஷ்மீப்பிராட்டியை எப்பொழுது(சஉ) முடைய ஸ்ரீ ஸத்தியமூர்த்தியின் சௌந்தரியத்தை நன்ருய் ஸேவி த்து, உருகின மனதில் மூர்த்தியை நிலைநிறுத்தி, பக்தர்களின்(சரு) பாவங்களைப் போக்கும் பகவானை நமஸ்கரித்து வேதாந்தார்த்தத் தை யுட்கொண்டதும், மேகம் முழங்குவதுபோல் கம்பீரமானது மான சொல்லால் துதிசெய்கிருன். (சச)

ஸகல சராசரங்களுக்குள் பிரவேசித்து அவைகளுக்கு ஆதார மாய் "நாராயணன்" என்ற பெரும் பெயர்பெற்று தீக்குணங்கள் நீங்கி நற்குணங்களால் நிறைந்து, எல்லோரும்வந்து தன்னையடை ந்து நலம்பெறும்படி ஸுலபனுய் ஸத்திய க்ஷேத்திரத்தில் தம் மேன்மையோடு விளங்கும் தம்மை பலதடவை வணங்குகிறேன்.(சரு) பக்தர்களை அனுவர்த்தித்து அவ்வடியார்களுக்காகவே ஸத்தியமும் கருணையும் என்னும் இவற்றை வடிவாகக்கொண்டு "ஸத்தியகிரி நாதன்" என்ற பெயரைத்தரித்து அர்ச்சாவிக்கிரகத்தோடு கூடிய தம்மை நமஸ்கரிக்கிறேன். அளவிட முடியாதவராயும், ஆதியந்த(சசு) மற்றவராயும் உயர்ந்த வஸ்துவுக்கும் உயர்ந்தவராயும் நிற்கும் தேவ ரீரை எப்பொழுதும் எண்ணிநிற்கும் முனிவர்களும் காணுர்கள். அறிவீனனுன நான் எங்கே காண்பேன். (இவைகள் நின்ற திருக் கோலமான ஸத்தியமூர்த்தி விஷயம்.) (சஎ)

சந்திர ஸூர்யர்களாக விளங்கும் நேத்திரங்களையுடையனுய், அச்சந்திர ஸூர்யர்களை நடத்துமவனுய் சந்திரகாந்த சிலாரூப மான விக்கிரஹத்தையுடைய ஸ்வாமீ! தமது சந்திரனைக் காட்டி லும் மிகவழகுள்ளதாய் விளங்கும் திருமுகமண்டலத்தைக் கண்டு அதற்கே ஈடுபட்டுத் தம்மை நமஸ்கரிக்கிறேன். (இது ததிவாமன விக்கிரஹ விஷயம்.) (சஅ)

ஆதிசேஷனுடலில் சயனித்துக்கொண்டு, அளவற்ற ஆச்சரியத்தைத் தரும்படியான தர்சனமுடையராய் நித்தியமான மெய்யமலைக்கு நாதனாய், அந்தமில்லாத் தன்மையுடைய தம்மை வணங்குகிறேன். (இது சயனமூர்த்தி விஷயம்.) (௬௯)

கருடனைக் கொடியாகவும் வாஹனமாகவும் கொண்டு, நித்தியஸூரிகளுக்கும் பிர்மாதி தேவர்களுக்கும் நாதனாகி, "கேசி" என்ற வஸுரனைக் கொன்று அதனால் கேசவனென்ற பெயர் பெற்று, சிறந்த முடியுடையனாய், கருடனால் பிரதிஷ்டை செய்யப்பட்டு கருடப்பச்சையான பிம்பத்தையுடையராய், கருடனால் பூஜிக்கப்பட்ட பாதாரவிந்தத்தையுடைய தம்மை யான் பணிகிறேன் (இது மலைமேல் நின்ற விக்கிரஹ விஷயம்.) (௭௦)

தேவரீரை, ஒருவனாய் ஒரு எழுத்தான அகாரத்தின் பொருளாய், அல்லது ஒரு எழுத்தான பிரணவத்தின் பொருளாய், ஒருவனான தம்மையே பற்றினவர்களால் உபாஸிக்கப்பட்டு, ஒரே சக்கரத்தைக்கொண்ட தேரையுடைய சூர்யனுடைய மண்டலத்துள்ளிருக்கின்றவனாகி பிரளயகாலத்தில் ஏகார்ணவ ஜலத்தில் ஒருவனாய் ஆலினிலைமேல் கண்வளருமவனாய் வேதபுருஷர்கள் அறிகிறார்கள். முதலில் முட்டையாய்ப் பிறந்து பிறகு அதில் நின்றும் (௭௧)
வெளிப்படுவதாகிய இருபிறப்புடைய பக்ஷிகளுக்கு அரசனான கருடன் மேலேறி நிற்பவராய், துவைதம், அத்வைதம், என்ற இரு மதங்களுக்கும் இடமாய், இருநாவுடைய ஸர்ப்பங்களுக் கதிபதியான ஆதிசேஷனைப் படுக்கையாகவுடையராகி, ஜனனம், உபநயனம் ஆகிய இருபிறப்புடைய அந்தண சிரோமணிகளின் துன்பத்தை நீக்குமவனாய் பிரபுவாகி வைகுந்தம், திருப்பாற்கடல், திரு (௭௨)
வேங்கடமலை ஆகிய மூவிடங்களிலும் வாஸம்பெற்று, கிருதகம், அகிருதகம், கிருதகாகிருதகம் ஆகிய மூவுலகங்களுக்கும் ஈசனாய் ருக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று வேதங்களின் கிரியையான யாகஸ்வரூபனாய், அவ்வேதாந்தமான உபநிஷத்துகளின் பொருளாய், மாவலி வேள்வியில் மூவடிகொண்டவனாய், இப்பொழுது அனுபவிக்கின்றது இதற்கடுத்துவருவது, சேர்த்துவைத்திருக்கின்றது ஆகிய முப்பாவங்களைப் போக்குமவராகி, தேவர்களால் பூஜிக்கப்பட்டு நிற்கும் தேவரீரைச் சரணமடைகிறேன். நான்கு திருத்தோள்களுடன், வாஸுதேவன், ஸங்கர்ஷணன் பிரத்தியும்னன், அநிருத்தன் ஆகிய நான்கு வியூஹமூர்த்தியாய் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு புருஷார்த்தங்களையும் தருமவனாய் நான்குமுகத்தோடுகூடிய பிரமனால்நமஸ்கரிக்கப்பட்டு ருக், யஜுஸ் ஸாமம், அதர்வம் என்ற நான்கு வேதங்களுக்காதியான தம்மைப் பற்றுகிறேன். செவி, வாய், கண், மூக்கு, உடல் ஆகிய ஐம்பொறி

களின் அறிவாய், பிருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாயம் ஆகிய பஞ்சபூதமயமான பிரபஞ்சத்திற்கு உற்பத்தி காரணமாய் அவை களையழித்து சங்கு, சக்கரம், கதை, வாள், வில் ஆகிய பஞ்சாயுதங் களைத் தரித்து, பஞ்சஜனவசுரரை ஸம்ஹாரம் செய்த தமக்கு வந் தனம் செய்கிறேன். திதிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கைப்பு, கார்பு,(௫௫)
புளிப்பு ஆகிய அறுசுவைகளின் ரஸமறிந்தும், ஷட்கோசங்களுக்கு மேலாய் ஞானம், சக்தி, பலம் ஐசுவரியம், வீரியம், தேஜஸ் ஆகிய ஆறு குணங்களால் நிறைந்தும் ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத் தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் ஆகிய ஸ்வரங்களோடு கூடிய ஸாமவேதத்தில் கூறப்படுகிறீர். ஏழ் புரவிபூண்ட தேரை(௫௬)
யுடைய சூரியனும் விளங்கி ஆனந்தத்தைத் தரும் சந்திரனும், ஏழு வியாஹிருதிகளின் மேற்பொருளாயும் ஏழு ஜ்வாலைகளையு டைய அக்கினியை முகத்தில் படைத்து அவ்வக்கினி ஸ்வரூபனு யும், ஏழு காளமேகம்போன்ற திருமேனியையுடைய தமக்கு நமஸ் காரம் செய்கிறேன். (௫௭)

இந்திரன், அக்னி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபே ரன், ஈசானன் ஆகிய அஷ்டதிக்பாலனும், அஷ்டமூர்த்தியின் பிதாவுக்கும் பிதாவாயும், அஷ்டாக்ஷரத்தால் ஆராதிக்கத்தக்கவனு மான தம்மை அணிமை, மகிமை, கரிமை, லகிமை, பிராப்தி, பிரா காமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய அஷ்டஸித்திகளையும் அடையவேண்டி ஸேவிக்கிறேன். சூரியன், சந்திரன், செவ்வாய்,(௫௮)
புதன், வியாழன், சுக்கிரன், சனி, ராகு, கேது ஆகிய ஒன்பது கிர ஹங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கும் ஆகாயம்போல் வைரம், வைடூரியம், மாணிக்கம், மரகதம், கோமேதகம், புஷ்பராகம், முத்து, பவழம், நீலம் ஆகிய நவரத்தினங்களால் அலங்கரிக்கப் பட்ட திருமேனியுடையராயும், சிருங்காரம், வீரம், கருணை, அத் புதம், ஹாஸ்யம், பயாநகம், பீபத்ஸம், ரௌத்திரம், சாந்தி ஆகிய நவரஸங்களையும் அனுபவிக்கத்தக்க ஸ்தானமாயும், இதைவிட புதி தான ரஸத்திற்கு இருப்பிடமாயும் இருக்கும் தம்மை செவி, வாய், கண், மூக்கு, குறி, அபானம் ஆகிய ஒன்பது துவாரங்களுள்ள குட ம்போன்ற சரீரத்தையுடைய நான் தியானம் செய்கிறேன். (௫௯)

கர்மேந்திரிய ஞானேந்திரியங்களாகிய தசேந்திரியங்களுக்கு மேற்பட்டவனும், தசாவரணமுடையவனும், பிரளயத்தில் தசா ங்குலப் பிரமாணமுடையவனும், மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்மன், வாமனன், பரசுராமன், ரகுராமன், பலராமன், கிருஷ்

ணன், கல்கி ஆகிய தசாவதாரங்களெடுத்து கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு அக்னி, நிருருதி, வாயு, ஈசானியம், ஆகாயம், பாதாளம் ஆகிய பத்து திக்குகளிலும் நிறைந்த கீர்த்தியுடையனும், நூறு (௬0) யாகம் செய்த தேவராஜனிடம் விசேஷப் பிரீதியுடையவனும், சக்ராயுதத்தால் அஸுரர்களைத் துணித்தவனும், நூறிதழ்களுடைய தாமரைப்பூக் குடையுடையவனுமான தேவரீரை நூறு தடவை நமஸ்கரிக்கிறேன். (௬௧)

பேர்களாயிரத்தாய், கண்களாயிரத்தாய், முடிகளாயிரத்தாய், தாள்களாயிரத்தாய், தோள்களாயிரத்தாய், ஆயிரமிரவியின் ஒளி போன்ற ஒளியுடைய தம்மை ஸ்தோத்திரம் செய்கிறேன். (௬௨)

என்று இவ்விதம் துதி செய்துகொண்டிருக்கும் அவ்வரசனுக் கனுக்கிரஹம் செய்யக்கருதி, ஸத்தியகிரி நாதனென பகவான் ஆநந்தத்தோடு கூடினவராய் பிரத்தியக்ஷமாகி அருளிச் செய்கிறார். (௬௩)

ஓ பூபதியே! நீர் செய்த திருப்பணியாலும் ஸ்தோத்திரத்தாலும் நான் மிகவும் திருப்தியடைந்தேன். உமக்கு வேண்டிய வரத்தைத் தருகிறேன் கேட்டுக்கொள்ளும். என்ற பகவானை நோக்கி இந்திரத்தியும்னராஜன் கூறுகிறான். (௬௪)

ஸ்ரீ ஸத்தியகிரி நாதனே! வேதத்தின் சிகரமான உபநிஷத்துக்களால் கூறப்பட்டு பூர்ணனுயிருக்கும் தம்மிடத்தில் நிலைநின்ற பக்தியே எனக்கு எப்பொழுதும் இருக்கவேண்டும். வேறு வரம் ஒன்றும் வேண்டுவதில்லை. என்று பிரார்த்தித்த அரசனை நோக்கிப் பகவான் அருளிச்செய்கிறார். (௬௫)

ராஜனே! என்னுடைய அனுக்கிரகத்தால் உன் மனதில் நிலை நிற்கும் பக்தியுண்டாவதுடன் இவ்வுலகிலுள்ள ஸகல பாக்கியங்களையும் பரலோக பாக்கியத்தையும் நீ அடைவாய் என்று அனுக் (௬௬) கிரகம் செய்துவிட்டு ஸ்ரீ லக்ஷ்மீநாதன் மறைந்தார். அரசனும் மிகவும் சந்தோஷமடைந்து திக்குவிஜயம் செய்யச்சென்றான். (௬௭)

இவ்விதம் இந்த ஸத்திய க்ஷேத்திரத்தில் முதலில் ஸத்திய தேவதையும், ஆதிசேஷனும், சந்திரனும், கருடனும், பிறகு ஸத்தியமுனிவரும், புரூரவ சக்கரவர்த்தியும், தக்ஷகனும், கமலநயன ராஜனும் ஆகிய இவ்வெட்டுப் பெயர்களும் ஸ்ரீ ஸத்திய மூர்த்தியைப் பிரதிஷ்டை ஆராதனங்களால் நிலைநிறுத்தினர்கள். இந்தி

ரத்தியும்ன ராஜனும் கமலநயனனுல் கட்டப்பட்டு பிறகு ஜீர்ண மான கோவிலே மறுபடிபுதுப்பித்து இவர்களிலும் சிறந்தவனுனன் (சுஅ)

என்று பிர்மாண்ட புராணத்தில்
மகேசுவரநாரத ஸம்வாதத்தில்
ஸத்தியக்ஷேத்திர மகிமையில்
இந்திரத்தியும்னன் கதை என்ற
எட்டாவது அத்தியாயம்
பூர்த்தி பெற்றது.

---

ஸ்ரீ ஸத்தியமூர்த்தயே நம:

ரிஷிசிரோமணிகளின் மனமாகிய தாமரைமலரில் எப்பொழுதும் வஸிக்கின்றவராய் ஸ்ரீதேவி பூதேவிகளுடன் சேர்ந்திருக்கின்ற ஸ்ரீ ஸத்தியகிரி நாதனுக்கு மங்களமுண்டாக வேண்டும்.

எல்லோருக்கும் மங்களமுண்டாகுக.

---

𑌸𑌤𑍍𑌯𑌗𑌿𑌰𑍀𑌶𑌾𑌷𑍍𑌟𑍋𑌤𑍍𑌤𑌰 𑌶𑌤𑌨𑌾𑌮𑌶𑍍𑌲𑍋𑌕𑌾𑌃 ॥

[illegible] ।
[illegible] ॥ ௫ ॥

[illegible] ।
[illegible] ॥ ௬ ॥

[illegible] ।
[illegible] ॥ ௭ ॥

[illegible] ।
[illegible] ॥ ௮ ॥

[illegible] ।
[illegible] ॥ ௯ ॥

[illegible] ।
[illegible] ॥ ௰ ॥

[illegible] ।
[illegible] ॥ ௧௧ ॥

## இந்தத் திருமெய்யம்
## திவ்விய தேசவிஷயமாய் திருமங்கை ஆழ்வார்
## அருளிச்செய்த திருமொழிப் பாசுரங்கள்.



௨-வது பத்து, ௫-வது திருமொழி, ௮-வது பாட்டு.

பெண்ணாகியின்னமுதம்வஞ்சித்தானைப்
பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானை ‡
தண்ணார்ந்தவார்புனல்சூழ்மெய்யமென்னும்
தடவரைமேல்கிடந்தானைப்பணங்கள்மேவி ‡
எண்ணானையெண்ணிறந்தபுகழினானை
யிலங்கொளிசேரரவிந்தம்போன்றுநீண்ட
கண்ணானைக் ‡ கண்ணாரக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (௧)

௩-வது பத்து, ௬-வது திருமொழி, ௯-வது பாட்டு.

நிலையாளா! நின்வணங்க வேண்டாயே யாகிலும் ‡ என்
முலையாளவொருநா ளுன்னகலத்தாலாளாயே ‡
சிலையாளா! மரமெய்த திறலாளா! திருமெய்ய
மலையாளா! ‡ நீயாள வளையாளமாட்டோமே. (௨)

௫-வது பத்து, ௫-வது திருமொழி, ௨-வது பாட்டு.

கலையாளாவகலல்குல் கனவளையும்கையாளாவென்செய்கேன்நான் ‡
விலையாளாவடியேனைவேண்டுதியோ வேண்டாயோவென்னும்‡மெய்ய
மலையாளன்வானவர்தம்தலையாளன் மராமரமேழெய்தவென்றிச்
சிலையாளன்‡என்மகளைச்செய்தனக ளெங்ஙனம்நான்சிந்திக்கேனே. (௩)

௬-வது பத்து, ௮-வது திருமொழி, ௭-வது பாட்டு.

கட்டேறுநீள்சோலைக் காண்டவத்தைத்தீமூட்டி
விட்டானை ‡ மெய்யமமர்ந்த பெருமானை ‡
மட்டேறுகற்பகத்தை மாதர்க்காய் ‡ வண்துவரை
நட்டானைநாடி நறையூரில்கண்டேனே. (௬)




அ-வது பத்து, உ-வது திருமொழி, ங-வது பாட்டு.

அருவிசேர்வேங்கடம் நீர்மலையென்றுவாய்
வெருவினாள் ‡ மெய்யம்வினவி யிருக்கின்றாள் ‡
பெருகுசீர்க் கண்ணபுரமென்று பேசினாள்
உருகினாள் ‡ உள்மெலிந்தாள் இதுவென்கொலோ. (ஞ)

கூ-வது பத்து, உ-வது திருமொழி, ங-வது பாட்டு.

வேயிருஞ்சோலைவிலங்கல்சூழ்ந்த மெய்யமணாளர் ‡இவ்வையமெல்லாம்
தாயினநாயகராவர்தோழீ தாமரைக்கண்களிருந்தவாறு ‡
சேயிருங்குன்றம்திகழ்ந்ததொப்பச் செவ்வியவாகிமலர்ந்ததோதி ‡
ஆயிரம்தோளொடிலங்குபூணு மச்சோவொருவாழகியவா. (சு)

கO-வது பத்து, க-வது திருமொழி, ரு-வது பாட்டு.

சுடலையில்சுடுநீற னமர்ந்ததோர் ‡
நடலைதீர்த்தவனை நறையூர்க்கண்டு ‡ என்
உடலையுள்புகுந் துள்ளமுருக்கியுண் ‡
விடலையைச் சென்றுகாண்டும் மெய்யத்துளே. (எ)

கக-வது பத்து, எ-வது திருமொழி, ரு-வது பாட்டு.

மையார்கடலும் மணிவரையும் மாமுகிலும் ‡
கொய்யார்குவளையும் காயாவும்போன்றிருண்ட
மெய்யானை ‡ மெய்யமலையானைச் சங்கேந்தும்
கையானைக் ‡ கைதொழாக் கையல்ல கண்டாமே. (அ)

திருக்குறுந்தாண்டகம், ககூ-வது பாட்டு.

பிண்டியார்மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணும் ‡
உண்டியான்சாபம்தீர்த்த வொருவனூர் ‡ உலகமேத்தும்
கண்டியூரரங்கம்மெய்யம் கச்சிபேர்மல்லையென்று
மண்டினார் ‡ உய்யிலல்லால் மற்றையார்க்குப்பலாமே. (கூ)

வானவர்தங்கள்கோனும் மலர்மிசையயனும் ‡ நாளும்
தேமலர்தூவியேத்தும் சேவடிச்செங்கண்மாலை ‡
மானவேல்கலியன்சொன்ன வண்டமிழ்மாலைநாலைந்தும் ‡
ஊனமதின்றிவல்லா ரொளிவிசும்பாள்வர்தாமே. (கO)

பெரிய திருமடலில்

திருமெய்யத்தின்னமுதவெள்ளத்தை

இவ்விதம் திருமங்கைமன்னன் மங்களாசாஸனம் செய்திருக்கிறார்.